# தர்மசக்கரம்



சித்தார்த்தி ௵ வைகாசி ௴ சக்கரம் 28 ஆரம் 5

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
திருப்பராய்த்துறை-639 115 திருச்சி ஜில்லா.

# குற்றாலத்தில் பருவ அந்தர்யோகம்

### 15-6-1979 முதல் 15-8-1979 முடிய

திருக்குற்றாலம் ஐந்தருவி ஸ்ரீ ராமகிருஷ்ண ஆச்ரமத்தில் 1979ஆம் ஆண்டு ஜூன் மாதம் 15ஆம் தேதி முதல் ஆகஸ்ட் மாதம் 15ஆம் தேதி முடிய இரண்டு மாதங்களுக்கு கீழ்க்கண்ட சாதனை முறைப்படி அந்தர்யோகம் நடைபெறும். ஒருவர் மூன்று தினங்களுக்குக் குறையாமலும் பத்துத் தினங்களுக்கு மேற்படாமலும் இந்த இரண்டு மாதங்களுக்கு நடைபெறும் அந்தர்யோகத்தில் கலந்து கொள்ள அனுமதிக்கப்படுவார். எந்தத் தேதிகளில் தாம் கலந்துகொள்வதற்கு விரும்புகிறார் என்பதைக் கடிதமூலம் குற்றாலத்துக்கு எழுதி முற்கூட்டி அனுமதி பெற்றுக்கொள்க. உணவுக்காக நாள் ஒன்றுக்கு ரூபாய் ஏழரை விதம் ஆச்ரமத்துக்கு வந்த பின்பு நேரில் செலுத்தினால் போதுமானது. படுக்கை வசதிக்குத் தேவையானதை உடன் கொண்டுவரவேண்டும். தாய்மார்களும் பருவ அந்தர் யோகத்தில் கலந்துகொள்ளலாம். தாய்மார்கள் தங்குவதற்குத் தனி இடவசதி இருக்கிறது. நடைமுறையைப் பின்பற்ற இயலாத குழந்தைகளும் வயோதிகர்களும் அந்தர்யோக காலத்தில் தங்குவதற்கு அனுமதிக்கப்படமாட்டார்கள்.

### சாதனை முறை

**காலை**

| | மணிமுதல் | மணிவரை |
|---|---|---|
| திருப்பள்ளியெழுச்சி. தியானம், நாமஜபம் | 4-00 | 5 00 |
| ஐந்தருவி ஸ்நானம் | 5 30 | 7-00 |
| தியானம் | 7-00 | 7-30 |
| சிற்றுண்டி | 7-30 | |
| பஜனை | 10-00 | 10-30 |
| உபந்யாசம் | 10-30 | 11-00 |
| தியானம் | 11-00 | 11-15 |
| அர்ச்சனை, தீபாராதனை | 11-15 | 11-30 |
| உணவு | 12-00 | |

**மாலை**

| | மணிமுதல் | மணிவரை |
|---|---|---|
| பஜனை | 3-00 | 3-30 |
| உபந்யாசம் | 3-30 | 4-00 |
| தியானம் | 4-00 | 4-15 |
| சிற்றுண்டி | 4-15 | |
| நாமபஜனை. ஆரத்திகம் | 6-30 | 7-00 |
| தியானம் | 7-00 | 7-30 |
| உணவு | 7-30 | |
| ஸத் ஸம்பாஷணை | 8-00 | 8-30 |

ஸ்ரீ ராமகிருஷ்ண ஆச்ரமம்
குற்றாலம்-627 802, (வழி) தென்காசி

சுவாமி குஹானந்தர்

# VIVEKANANDA KENDRA, KANYAKUMARI

## ANNOUNCES

### 3-WEEK YOGA SHIKSHA SHIBIR,

**(Residential Summer Camp for Men)**

is to be held at Kanyakumari from 10th June to 30th June, to impart training in Yoga and to make the participants conversant with our Cultural Heritage. Medium of instruction is English. The camp is open to men only. Camp fee including boarding and lodging charges is Rs. 150/- plus a Registration fee of Rs 25/- (Total Rs. 175). Those above the age of 18, possessing knowledge of English and sound health are eligible to participate. For prospectus apply forthwith to Vivekananda Kendra, Yoga shibir, Vivekanandapuram, Kanyakumari-629 702, ( Phone No. 32 and 50 ).

# தர்ம சக்கரம்

மாத சஞ்சிகை



சக்கரம் 28 | சித்தார்த்தி ஸூ வைகாசி மீ | ஆரம் 5

பொருளடக்கம் பக்கம்



## சந்தா விவரம்

**டிபாஸிட் சந்தா:** ரூ. 100 அனுப்பி இங்கு டிபாஸிட் செய்துவிட்டால் டிபாஸிட் இங்கு இருக்கும்வரையில் மாதந்தோறும் தர்மசக்கரப் பத்திரிகை தங்களுக்கு வந்து கொண்டிருக்கும். ஆண்டுதோறும் சந்தாச் செலுத்திப் புதுப்பிக்கவேண்டியதில்லை. பத்திரிகை வேண்டாம் என்று கருதும்பொழுது டிபாஸிட் செய்த ரூபாய் நூறையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். தாங்கள் டிபாஸிட் செய்யும் தொகையை பேங்கில் இருப்பாக வைத்து அதினின்று கிடைக்கும் வட்டி சந்தாவுக்காக எடுத்துக்கொள்ளப் படுகிறது. இந்தத் திட்டம் உள்நாட்டுக்கு மட்டும் உரியது.

**ஆண்டு சந்தா:** ரூ. 10 செலுத்தியது முதல் அல்லது அடுத்த மாதம் முதல் பன்னிரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியில் கிடைக்கும்படி பத்திரிகை அனுப்பப்படுகிறது.

**சகாய சந்தா:** தர்ம சக்கரம் அடக்க விலைக்கு வெளியிடப்படுகிறது. ஆண்டு சந்தா ரூபாய் பத்துச் செலுத்த இயலாதவர்கள் ரூபாய் ஐந்து மட்டும் அனுப்பலாம். பாக்கி ரூபாய் ஐந்தைப் பாண்டிச்சேரி S. விஸ்வநாதன் 'தர்ம சக்கர உதவி நிதி' யினின்று ஈடு செய்து கொள்கிறோம். தெய்வீக விஷயமாதலால் ரூபாய் பத்துச் செலுத்த இயலுகிற வர்கள் இந்தச் சலுகையைப் பயன்படுத்த வேண்டாம்.

**இலவச சந்தா:** தமிழ் நாட்டிலும் பாண்டிச்சேரியிலும் அரசாங்கத்தால் 1496 பொது நூலகங்கள் அமைக்கப்பெற்றுள்ளன. அன்பர்களின் உதவியால் அவை அனைத்துக்கும் தர்ம சக்கரம் இனமாகத் தொடர்ந்து அனுப்பப்பெற்று வருகிறது. நூலக நிர்வாகியிடம் கேட்டுப் பெற்றுப் படித்துப் பயனடையக் கோருகிறோம்.

**உள்நாடு தனி இதழ் ரூ. 1-00. வெளிநாடு வருட சந்தா ரூ. 20-00**

# அந்தர்யோக விவரங்கள்

**மதுரை ஜில்லா—சுருளியில் 16—5—79 புதன்கிழமை**

*இடம்:* சுருளி தீர்த்தம்
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**திருநெல்வேலி ஜில்லா—அம்பாசமுத்திரத்தில் 20—5—79 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* அகஸ்தியர் கோவில்
*நேரம்:* காலை 9-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி ஆத்மானந்தர்

**வடஆற்காடு ஜில்லா—ஆம்பூரில் 20—5—79 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* அருள்மிகு நாகநாத சுவாமி ஆலயம்
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**வடஆற்காடு ஜில்லா—குடியாத்தத்தில் 21—5—79 திங்கட்கிழமை**

*இடம்:* வேதாந்தப் பாடசாலை
*நேரம்:* காலை 10-00 மணி முதல் மாலை 4-30 மணி வரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**கோவை ஜில்லா—சித்திரச்சாவடியில் 3—6—79 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த ஆச்ரமம்
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
*உணவு வசதி:* நேரில் பகல் உணவிற்கு ரூ 1-00ம், மாலைசிற்றுண்டிக்கு 75 பைசாவும் செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.

**வடஆற்காடு ஜில்லா—ஆரணியில் 9—6—79 சனிக்கிழமை**

*இடம்:* கோட்டை ஸ்ரீ கைலாச நாதர் ஆலயம்
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி ஸதானந்தர்

**வடஆற்காடு ஜில்லா—வேலூரில் 10—6—79 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* ஸ்ரீ வெங்கடேஸ்வரா மேல் நிலைப்பள்ளி
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி ஸதானந்தர்

**சேலம் ஜில்லா—ராசிபுரத்தில் 17—6—79 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* தெய்விக வாழ்க்கைச் சங்கம்
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி ஆத்மானந்தர்

# ஸ்ரீ தாயுமான சுவாமி கோயில் திருப்பணி



ஸ்ரீ தாயுமான சுவாமிகள் கோயில் திருப்பணிக்குத் தொகை சுமார் ஆறு இலட்சம் ரூபாய் ஆகும் என மதிப்பிடப்பட்டிருக்கிறது. மார்ச் மாதம் முடிய அதன் பாதி அளவாகிய ரூபாய் மூன்று லக்ஷம் வசூலாகியிருந்தது. ஏப்ரல் மாதத்தில் வந்துள்ள நன்கொடைகளின் தொகை இப்பொழுது இவ்விதழில் வெளியிடப்படுகிறது.

## *1979 ஏப்ரல் மாத நன்கொடை விவரம்*

| தேதி | விலாசம் | | ரூபாய் |
|---|---|---|---|
| | மார்ச் மாதம் முடிய நன்கொடை வசூல் | | *3 02 281* |
| *1-4-79* | ஸ்ரீ விவேகானந்த வித்யாவன பழைய மாணவர் ஒருவர் | திருச்சி | *1 000* |
| *2-4-79* | ஸ்ரீ T. M. அருணசலம் பிள்ளை | ஹைஸ்கூல் ரோடு, அம்பாசமுத்திரம் | *101* |
| | ஸ்ரீ N. சென்னியப்ப கவுண்டர் | பெரிய போது, கோவை | *100* |
| *4-4-79* | Dr. VR. ராமனுதன் செட்டியார் | திருநகர், மதுரை | *1 001* |
| | ஸ்ரீமதி R. நாகலக்ஷ்மி அம்மாள் & திரு A. T. V. ரங்கசாமி செட்டியார் | வேம்படிதாளம் | *251* |
| | தொழிலாளர்கள், கோயம்புத்தூர் எலக்டிரிகல் | எக்யூப்மெண்ட்ஸ், மேட்டுப்பாளையம் | *250* |
| *6-4-79* | ஆசிரியர்கள் V. K. வித்யாலய, | ஓயான், அருணசல பிரதேசம் | *100* |
| *7-4-79* | ஸ்ரீ V. கெங்குசாமி, அமராவதி ஸ்ரீ வெங்கடேசா பேப்பர் மில்ஸ் லிட், | மடத்துக்குளம், கோவை | *2 000* |
| | ஸ்ரீ AR. அழகப்பா செட்டியார் | காரைக்குடி | *2 000* |
| *8-4-79* | ஸ்ரீ S. பெருமாள் குடும்பத்தினர்கள் | திருவானைக்கோவில் | *101* |
| *14-4-79* | ஸ்ரீ M. பரமசிவம் & சன்ஸ், | செங்கோட்டை | *101* |
| *19-4-79* | ராஜா பவுண்டரி | பாப்பநாயக்கன் பாளையம், கோவை | *101* |
| | ஸ்ரீ N. குமாரசுவாமி | கிருஷ்ணன் கோயில், நாகர்கோயில் | *101* |
| | ஸ்ரீ N. முத்துசாமி | பஞ்சபட்டி, திருச்சி | *101* |
| | ஸ்ரீமதி P. காமாட்சியம்மாள் | நேதாஜி வீதி, ஈரோடு | *101* |
| | ஸ்ரீ G. இரத்னசபாபதி | கண்டாச்சிபுரம், தென்னுற்காடு | *100* |
| *20-4-79* | ஸ்ரீ V. N. M. A. R. ராஜமகேந்திரன் | விருதுநகர் | *104* |
| | ஸ்ரீ K. M. K. நாகரத்தினம் | சிங்காரத்தோட்டம், சென்னை | *101* |
| *21-4-79* | தி பிரிலியண்ட் டிரேடர்ஸ் | மதுரை ரோடு, தென்காசி | *1 000* |
| *24-4-79* | ஸ்ரீ P. T. மருதநாயகம் பிள்ளை | சக்தி ஸ்டுடியோ, வேலூர் | *105* |
| *25-4-79* | ஸ்ரீ M. ராமசந்திரன் | T. C. K. P. தெரு, விருதுநகர் | *106* |
| | ,, மு. சண்முகவேலு | சக்திரோடு, ஈரோடு | *101* |

| | | | |
|---|---|---|---|
| 25-4-79 | ஸ்ரீ T.K.L. வரதாச்சாரி &விசாலாக்ஷி, மால்வடம் போக்கிதெரு, மதுரை | | 100 |
| | ,, S. காளிராஜன் | கொல்லம் | 100 |
| 30-4-79 | ஸ்ரீமதி RM. சௌந்தரம் | திருநகர், மதுரை | 601 |
| | ,, அம்மணி அம்மாள் | சின்னமரெட்டிபாளையம், திருச்சி | 201 |
| | ,, பார்வதி அரசு | K. K. நகர், சென்னை | 108 |
| | ஸ்ரீ A. V. சுப்பிரமணிய முதலியார், | மைடிஸ்கேல், மினலூர், கேரளா | 101 |
| | ஸ்ரீமதி விலாசவதி சன்முகநாதன் | தண்டயார்பெட், சென்னை | 101 |
| | ஸ்ரீ M. நல்லியப்ப கவுண்டர் | M. G. புதூர், கோவை | 101 |
| | ,, S. M. P. கிருஷ்ணன் செட்டியார் | எட்டயாபுரம் | 100 |
| | ,, P. S. சுப்பராஜா சேரிட்டி டிரஸ்ட் | தென்காசி | 1 000 |
| | ,, M. S. P. வேலாயுத நாடார் | பாவூர்சத்திரம் | 500 |
| | ,, சி. மு. குருசாமி | பினங்கு | 192 |
| | ,, கெ. வெ. லெக்ஷ்மணன் | ,, | 196 |
| | ,, நாராயணன் | ,, | 383 |
| | ,, P. கோபால் | ,, | 269 |
| | ஓர் பக்திமதி | சிவகாசி | 1 000 |
| | ஸ்ரீ சுவாமிஜி சன்மார்க்க சங்கம் | ,, | 250 |
| | மெய்யறிவுக் கழகம் | திருமங்கலம் | 100 |
| | ஸ்ரீ A. K. P. ஷண்முகசுந்தர நாடார் & சன் | விருதுநகர் | 100 |
| | ,, P. A.C.S. சரஸ்வதி சங்கரலிங்கம், குருசாமி கொத்தனூர் தெரு | ,, | 100 |
| | ,, V. N. M. A. அய்யம் பெருமாள் நாடார், மெயின்பஜார் | ,, | 100 |
| | ,, V. V. S. கேசவன் ,, | ,, | 100 |
| | ஸ்ரீ P. M. S. வேணுமாலாபோஸ் | மாந்தோப்புத் தெரு, விழுப்புரம் | 100 |
| | சென்ட்ரல் ஸ்டோர்ஸ் | மெயின்பஜார், விருதுநகர் | 100 |
| | ஸ்ரீ O. S. K. S. M. தனலெக்ஷ்மி அம்மாள் நாயக்கமார் தெரு | ,, | 100 |
| | ஸ்ரீ V. T. A. விஜயவேல், உள்தெரு, | ,, | 100 |
| | ஸ்ரீ S. T. துரைராஜன், வெங்கடாசலபதி ரைஸ்மில் | பேராவூரணி | 100 |
| | ஸ்ரீமதி V. மீராபாய் | சிவகாசி | 100 |
| | ஓர் பக்திமதி | ,, | 100 |
| | ஸ்ரீமதி R. கனகம்மாள் | ,, | 100 |
| | ,, P. சீதாலெக்ஷ்மி அம்மாள் | ,, | 100 |
| | ,, R. திலகவதி | ,, | 100 |
| | ,, லௌலி விஸ்வம்மாள் | ,, | 100 |
| | செல்வி P. தீபலெக்ஷ்மி | ,, | 100 |
| | ஸ்ரீ P. கணபதி ஆசாரி | ,, | 100 |
| | ஸ்ரீ M. S. K. S. S. சுப்பையா | ,, | 100 |
| | ஸ்ரீ N. R. K. R. ரவீந்திரன் | ,, | 100 |
| | M/s. ஹோம் அப்ளியன்ஸ் | எர்ணுகுளம் | 100 |
| | திருமங்கலம் மெய்யறிவுக் கழகம் மூலம் வசூல் | | 201 |
| | ரூ. 100க்கு கீழ்வந்த நன்கொடைகள் | | 4 012 |
| | ஸ்ரீ V.V.H.S. குருகுல மாணவர்கள் மூலம் ரூ. 100க்கு கீழ்வந்த நன்கொடைகள் | | 600 |
| | | ஆகக் கூடுதல் ரூ. | 3 23 523 |



प्रज्ञानं ब्रह्म

# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.


| சக்கரம் 28 | சித்தார்த்தி ஸு வைகாசி மீ | ஆரம் 5 |
|---|---|---|


## பிரார்த்தனை

उद्भवस्थितिसंहार कारिणीं क्लेशहारिणीम् ।
सर्वश्रेयस्करीं सीतां नतोऽहं रामवल्लभाम् ॥

*உத்பவஸ்திதிஸம்ஹார காரிணீம் க்லேசஹாரிணீம்*
*சர்வஸ்ரேயஸ்கரீம் சீதாம் நதோऽஹம் ராமவல்லபாம்*

தோற்றம், இருப்பு, ஒடுக்கத்திற்குக் காரணமாயிருப்பவளும்; துன்பங்களனைத்தையும் துடைப்பவளும்; நலன்கள் அனைத்தையும் நல்குபவளுமாகிய ராம அன்பில் ஊறியுள்ள சீதைக்கு வணக்கம் செலுத்துகிறேன்.

தீதெலா மொன்றும் வன்மை செறிந்திருட் படலம் போர்த்த
பாதகச் சிந்தை பெற்ற பதகனுன் பாத நீழல்
ஆதரவடைய வுள்ளன்பருள்கிலேயாயின் மற்றியார்
போதனை செய்ய வல்லார் பூரண னந்த வாழ்வே.

— தாயுமானவர்

# அருள் விருந்து

உடலில் தன்னில் தானுயிருப்பது ஆத்மா.

சந்தடிகளுக்கிடையில் ஏகாந்தத்திலிருப்பவன் சான்றோன்.

பாரமார்த்திகப் பெருவாழ்வு யாண்டும் எல்லார்க்கும் சொந்தம்.

குழந்தையின் உள்ளம் படைத்திருப்பவனுக்கு உபத்திரவம் ஒன்றுமில்லை.

பக்தியினின்று வழுவாதிரு. அப்பொழுது கடவுள் உனக்குச் சொந்தமாகின்றார்.

ஆபத்தை அமைதியாக ஏற்பவன் வீரன். அதற்குப் பயந்து ஓடுபவன் கோழை.

பாலில் வெண்ணெய் போன்று உடலெங்கும் வியாபித்திருப்பது அறிவுப் பொருள்.

மரணத்தைத் தன் தலையணையாகக்கருதுபவன் பண்பாட்டின் உச்சநிலைக்கு வந்துள்ளான்.

பேச்சையும், பழக்கத்தையும் ஒன்றுபடுத்தாதவன் நறுமணமற்ற மலர் போன்றவன்.

சொர்க்கத்தையும், நரகத்தையும் மனது தனக்குத்தானே சிருஷ்டித்துக் கொள்ளுகிறது.

வாழ்வு செயலற்றுத் துருப்பிடித்துப் போவதைவிடச் செயல்புரிந்து தேய்ந்துபோவது நன்று.

காற்றடிக்கும் பொழுது கற்பாறை அசைவதில்லை. அதேபோன்று பிரதிகூலமான சூழ்நிலையிலும் அசையாதிரு.

சன்மார்க்கத்தில் செல்லுபவன் அதைப்பற்றிப் பேசுவதில்லை. அதைப் பற்றிப் பேசுபவன் சன்மார்க்கத்தில் செல்லுவதில்லை.

உண்பதிலும், பருகுவதிலும், உடுப்பதிலும் கண்ணும் கருத்துமாயிருப்பது போன்று வழிபாட்டிலும் கண்ணும் கருத்துமாயிருப்பாயாக.

வெட்டியும், தோண்டியும், கிளறியும், உழுதும் பூமியைப் பண்படுத்துவது போன்று எண்ணியும், ஓர்ந்தும், உன்னியும், ஆராய்ந்தும் எண்ணத்தைப் பண்படுத்துக.

நேற்றுப் போயே போய்விட்டது. நாளைக்கு என்பது இன்னும் வரவில்லை. இன்றைய தினத்தை இனிது பயன்படுத்துக. காலத்தைக் கடவுள் கொடுத்த வரப்பிரசாதமாகக் கருது.

### பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

மாலை நேரத்தில் தம் அறையில் இப்பக்கமும் அப்பக்கமும் பரமஹம்சதேவர் நடந்துகொண்டிருந்தார். சிந்தனையில் மூழ்கியவராக மகேந்திரர் தன்னந்தனியராக அமர்ந்திருந்தார். திடீரென்று பரமஹம்சதேவர் மகேந்திரரைப் பார்த்து, "எனக்குச் சில சட்டைகள் வாங்கித்தா. பலபேர் தருகிற பொருட்களைப் பயன்படுத்த எனக்கு இயலுவதில்லை. இந்தச் சட்டைகளை எனக்குத் தைத்துத் தரும்படி சேனைத் தலைவரிடம் கேட்கலாமென்று எண்ணியிருந்தேன். ஆனல் நீயே அவைகளை எடுத்துத் தருவது பொருந்தும்." இதைக் கேட்ட மகேந்திரருக்குப் பரமதிருப்தி உண்டாயிற்று. "தங்கள் திருவுளப்படியே நான் அவைகளை ஆயத்தப்படுத்தித் தருகிறேன் ஐயனே" என்று இயம்பினர். மாலை சந்தியாநேரத்தில் பரமஹம்சதேவர் அறையில் சாம்பிராணி தூபம் போடப்பட்டிருந்தது. வழக்கம் போன்று அவர் தம் அறையிலே மாட்டப்பட்டிருந்த ஒவ்வொரு படத்தின் முன்பும் நமஸ்கரித்தார். அந்தந்த தெய்வத்தின் நாமத்தையும் மெல்லிய குரலிலே உச்சரித்தார். அறைக்கு வெளியில் நின்றுகொண்டு காது கொடுத்துக் கேட்டார். கங்கா நதியின் சலசலப்பு அமைதியாகக் காதுக்கு எட்டியது. காளி கோயில், விஷ்ணு கோயில், சிவன் கோயில்கள் ஆகியவைகளிடத்து ஆராதனை நிகழ்ந்துகொண்டிருந்ததின் அறிகுறியாக இன்னிசையும் காதில் வந்து வீழ்ந்தது. கதவு வழியாகப் பார்த்த பொழுது காட்சி ஒன்று கண்ணுக்கு எட்டியது. அர்ச்சகர் ஒருவர் தன் இடக்கையில் மணியையும், வலக்கையில் ஆராதனைக்குரிய தீபத்தையும் எடுத்துக்கொண்டு ஒவ்வொரு கோயிலுக்காகப் போவது புலப்பட்டது. ஆலயத்தின்கண் மாலை நேரத்தில் கிளம்பிய இனிய இசையோ கவர்ச்சிகரமான அந்த இடத்துக்கும், அமைதி பொருந்திய சந்தியா நேரத்துக்கும் முற்றிலும் ஒத்திருந்தது. வழிபட்டவர்களுடைய மனத்தகத்து வடிவெடுத்துக் கொண்டிருந்த எண்ணங்களுக்கு ஒத்ததாகவும் அந்த இசை இருந்தது. தினசரி வாழ்க்கையில் காட்சிக்கு எட்டுகிற ஏனைய உலகப்பொருள்களைப் பற்றிய எண்ணங்களெல்லாம் மனத்தகத்தினின்று மறைந்து பட்டுப் போயின.

சிறிது நேரத்துக்குப் பிறகு அவருடைய முகவிலாசத்துக்கே முற்றிலும் பொருந்தியதாயிருந்த ஆனந்த பரவச நிலையில் ஊறியவராய் அவர் ஆசனத்தில் அமர்ந்தார். கல்கத்தாவினின்று ஈசானர் வந்திருந்தார். அவர் உள்ளத்தில் கடவுளைப்பற்றிய விசுவாசம் சதா ததும்பிக்கொண்டிருந்தது. அந்த ஈசானர் அரிய கருத்து ஒன்றை இடையிடையே வெளிப்படுத்துவதுமுண்டு. அதாவது துர்க்காதேவியின் திருநாமத்தை உச்சரித்துக்கொண்டு மானுடனொருவன் தன் இல்லத்தினின்று வெளியே புறப்படுவானாகில் சிவனார் தாமே தம்முடைய தெய்விக ஆயுதங்களைக்கொண்டு அப்பக்தனைப் பாதுகாக்கின்றார்.

பரமஹம்சதேவர்: (ஈசானரைப் பார்த்து) "உமக்குத் தெய்வவிசுவாசம் ஏராளமாக உண்டு. அவ்வளவு பற்றுதல்கள் என்னிடத்து இல்லை. (இதைக் கேட்டு எல்லாரும் நகைக்கின்றனர்.) விசுவாசத்தின் வாயிலாகவே மானுடன் ஒருவன் ஈசுவர அனுபூதியைப் பெறமுடியும்."

ஈசானர்: "ஆம் ஐயனே."

பரமஹம்சதேவர்: "ஜபம் பண்ணுதல், உபவாசம் இருத்தல் ஆகிய ஆத்ம சாதனக்கிரியைகளைத் தாம் அனுஷ்டித்து வருகின்றீர். அது மிக நன்று. ஆத்ம சாதகனொருவனுக்குக் கடவுள் நாட்டம் ஓங்குமாகில் கடவுள் தாமே இச்சாதனங்களையெல்லாம் புரியும்படி பக்தனைத் தூண்டுகிறார். புரிகின்ற இக்கிரியைகளுக்குக் கைம்மாறு எதையும் கருத்தில் வாங்கிக்கொள்ளாது இந்தச் சாதனங்களைச் செய்து வருவானாகில் அவன் நிச்சயமாகவே ஈஸ்வரானுபூதியை அடையப் பெறுவான். சாஸ்திரங்களில் விதித்துள்ள கிரியைகளையெல்லாம் அனுஷ்டிப்பது பக்தன் ஒருவனுடைய பாங்கு ஆகும். அத்தகைய பக்திக்கு வைதிக பக்தி என்று பெயர். பின்பு இதற்கு மேலான பக்தி முறையொன்று உண்டு. அதற்கு ராகபக்தி என்று பெயர்.

ஈசனிடத்துப் பக்தன் வைக்கிற அன்பையும் அருள் நாட்டத்தையும் வளர்ப்பதால் இந்த ராக பக்தி உருவெடுக்கிறது. பிரஹலாதனுக்கு ராகபக்தி ஏராளமாய் உண்டாயிருந்தது. ஏதேனும் ஒரு பக்தனுக்கு ராகபக்தி உருவெடுக்குமானல் பிறகு அவன் சாஸ்திரங்களில் சொல்லிவைத்துள்ள கிரியை முறைகளை அனுஷ்டிக்க வேண்டிய அவசியமில்லை.''

1884ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 9ஆம் தேதி நிகழ்ந்த சத் சம்பாஷணை வருமாறு. இராமகிருஷ்ண பரமஹம்சதேவர் தமது அறையிலிருந்த சிறிய கட்டிலின்மீது கிழக்கு நோக்கிப் பார்த்தபடி அமர்ந்திருந்தார். பக்தர்கள் தரையின்மீது அமர்ந்திருந்தார்கள். நண்பகல் மகேந்திரநாதர் கல்கத்தாவினின்று வந்து பரமஹம்ச தேவரைச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்துவிட்டு ஓரிடத்தில் அமர்ந்திருந்தார். ஒருவர் பின் ஒருவராக மற்ற பக்தர்களும் வந்துகொண்டிருந்தனர். விஜயகிருஷ்ணகோஸ்வாமி ஆங்கு ஏற்கனவே வந்திருந்தார். அவருடன் பிரம்ம சமாஜத்து அன்பர்கள் சிலர் வந்திருந்தனர். ராம்சக்கரவர்த்தி என்னும் புரோகிதரும் ஆங்கு வந்திருந்தார். மகிமசரணரும், நாராயணனும், கிஷோரியும் சில நிமிஷங்களுக்குப் பிறகு வந்து சேர்ந்தனர். குளிர்காலம் துவங்கும் தறுவாயிலிருந்தது. பரமஹம்சதேவருக்குச் சட்டைகள் சில தேவையாயிருந்தன. அதைப்பற்றி அவர் மகேந்திரரிடம் ஏற்கனவே இயம்பியிருந்தார். பரமஹம்சதேவர் வேண்டிக்கொண்டதற்கு அதிகப்படியாக வெள்ளைச் சட்டைகளிரண்டும் கெட்டித்துணியில் அமைந்த சட்டை ஒன்றும் கொண்டுவந்திருந்தார். கெட்டித்துணி சட்டையைப் பரமஹம்சர் கேளாமலேயே மகேந்திரர் அது பயன்படுமென்று யூகித்துத் தாமாகக் கொண்டுவந்திருந்தார். பரமஹம்சதேவர் (மகேந்திரரைப் பார்த்து): ''கெட்டித்துணியைக் கொண்டு தைக்கப்பட்டுள்ள சட்டையை நீயே திரும்பி எடுத்துக்கொள். அது வேண்டும் என்று நான் கேட்கவில்லை. அதுமட்டுமன்று. அந்தகைய சட்டையை நான் உபயோகப்படுத்த மாட்டேன். நீ அதை உபயோகப்படுத்தலாம். நீ அதைக் கொண்டு வந்ததில் தோஷம் ஏதுமில்லை. ஆனல் எத்தகைய சட்டைகள் எனக்கு வேண்டுமென்று நான் உன்னிடம் சொல்லியிருந்தேன்?''

மகேந்திரர்: ''ஐயனே சாதாரணமாயுள்ள வெள்ளைத்துணி சட்டைகள் வேண்டுமென்று தாங்கள் என்னிடம் சொல்லியிருந்தீர்கள். கெட்டித்துணி சட்டை வேண்டுமென்று தாங்கள் என்னிடம் சொல்லவில்லை.''

பரமஹம்சதேவர்: ''ஆகையினல் தயவு செய்து அதை நீயே எடுத்துக்கொள்.''

(விஜயகிருஷ்ண கோஸ்வாமியையும், மற்றவர்களையும் பார்த்துப் பரமஹம்சர் பகர்ந்ததாவது): ''துவாரிகபாபு எனக்காக சால்வை ஒன்று கொண்டுவந்திருந்தார். மார்வாரி பக்தர்களும் சால்வை ஒன்று கொண்டுவந்திருந்தார்கள். இரண்டையும் ஏற்றுக்கொள்ள என்னல் இயலவில்லை. தேவைக்குமேல் மனிதன் பொருள்களை வைத்திருக்கலாகாது.''

விஜயகிருஷ்ண கோஸ்வாமி இடையில் புகுந்து இயம்பியதாவது: ''ஐயனே, அது சரி. மானுடன் ஒருவனுக்குப் பொருள் ஒன்று தேவையாயிருந்தால் அதை அவன் ஏற்றுக்கொள்ளுவது முறை. பின்பு அதைக் கொடுப்பதற்கு மற்றொரு மனிதன் இருந்தாகவேண்டும். கொடுப்பது மனிதனுக்குத்தானே சாத்தியமாகிறது?''

பரமஹம்சதேவர்: ''கொடுப்பவர் பகவான். ஆத்மசாதகன் ஒருவன் தனக்குத் தேவையாயிருப்பவைகள் எல்லாம் பகவானிடத்திருந்தே வருகின்றனவென்று கருதுதல் வேண்டும். மாமியார் தன்னுடைய மருமகளிடம் இயம்பியதாவது: 'குழந்தாய், ஒவ்வொரு மனிதனுக்கும் குற்றேவல் புரிவதற்கு யாராவது ஒருவர் இருந்தாகவேண்டும். குழந்தாய், இப்பொழுதுதான் புதியதாக இந்தப் புக்ககத்திற்கு நீ வந்துள்ளாய். ஆதலால் உனக்குத்தேவையாயுள்ளவசதிகளைச் செய்துவைக்க உடனடியாக யாருமே முன் வரமாட்டார்கள். அக்கோட்பாட்டின்படி உன்னுடைய பாதங்களை வருடித்தருவதற்கு யாராவது ஒருவரைக் கண்டுபிடித்தால் மிக நன்ருயிருக்கும்.' மருமகள் கொடுத்த பதிலாவது: 'மாமியாரே, கடவுள் தாமே என் பாதங்களை வருடிக்கொடுப்பார். அவரைத் தவிர வேறு யாரும் எனக்குத் தேவையில்லை.' தங்களைப்பற்றியோ, தங்களுடைய பராமரிப்பைப்பற்றியோ, பக்திமான்களும், பக்திமதிகளும் கவலைப்

படுவதில்லை. குழந்தையொன்று தன்னுடைய போஷிப்பைப்பற்றி ஒன்றுமே எண்ணுவதில்லை. ஆதலால் அந்தப் பொறுப்பைப் பெற்றோர்கள் எடுத்துக்கொள்கிறார்கள். அதே இடத்தில் பக்தர்களும் எதை உண்பது, எதை அணிவது என்பதைப்பற்றிக் கவலையற்று இருக்கிறார்கள். அப்படி அவள் இயம்பியதற்குத் தக்க காரணமிருந்தது. உள்ளன்போடு கூடிய தெய்வபக்தி அவளிடத்திருந்தது.

சாது ஒருவர் கொஞ்சம் செல்வத்தை நாடி அக்பர் சக்கரவர்த்தியிடம் சென்றிருந்தார். அப்பொழுது அக்பர் சக்கரவர்த்தி பிரார்த்தனை பண்ணிக்கொண்டிருந்தார். அவர் பண்ணிய பிரார்த்தனையாவது: 'இறைவா, எனக்குச் செல்வம் தேவை. வேண்டியவாறு திரவியத்தை எனக்குத் தந்தருள்வாயாக.' சாது அரண்மனையைவிட்டு வெளியே கிளம்பினார். ஆனால் சற்று அமர்ந்திருக்கும்படி சக்கரவர்த்தி அந்தச் சாதுவுக்குச் சைகை காட்டினார். தம்முடைய பிரார்த்தனையை முடித்துக்கொண்ட பிறகு அக்பர் சக்ரவர்த்தி சாதுவிடம் வந்து சொன்னதாவது: 'ஏன் வந்தவுடனே திரும்பிப்போக எத்தனித்தீர்?' சாது சொன்னதாவது: 'செல்வம் வேண்டுமென்றும், திரவியம் வேண்டுமென்றும் தாங்களே யாசகம் பண்ணிக்கொண்டிருந்தீர்கள். அதைப் பார்த்ததும் கருத்து ஒன்று என் மனதில் பட்டது. யாசகம் பண்ணுவது அவசியம் என்றால் கடவுளிடத்து யாசகம் பண்ணுவதே பொருந்தும். மற்றொரு யாசகனிடமிருந்து யாசகம் கேட்பது பொருந்தாது.'

விஜயகிருஷ்ணகோஸ்வாமி: "கயாவில் சாது ஒருவரை நான் கண்டேன். எக்காரியத்திலாவது அவர் தாமாக முந்துவதில்லை. பக்தர்கள் சிலருக்குப் போஜனம் பண்ணி வைக்கவேண்டுமென்று ஒருநாள் அவருக்கு மனதில் தோன்றியது. திடீரென்று கோதுமை மாவு, நெய், பழவகைகள் மற்ற உணவுப் பொருள்கள் அவரிடம் வந்து சேர்ந்தன. எங்கிருந்து அவைகள் எப்படி வந்து சேர்ந்தன என்பது யாருக்குமே விளங்கவில்லை.''

பரமஹம்சதேவர்:"சாதுக்களுள் மூன்று கூட்டத்தார் இருக்கிறார்கள். அவர்களை முறையே நல்லவர்கள், இடைத்தரமானவர்கள், கடைத்தரமானவர்கள் எனப் பாகுபடுத்தலாம். தலைத்தரமான சாதுக்கள் உணவுக்காக எந்தவிதமான யத்தனத்தையும் எடுத்துக்கொள்வதில்லை. தண்டம் தாங்கியிருக்கிற சாதுக்களுக்கிடையில் இடைத்தரத்தாரையும், கடைத்தரத்தாரையும் காணலாம். பிக்ஷை தேவையென்று உணருகிற இடைத்தரச் சாது ஒருவன் குடும்பி ஒருவனுடைய வீட்டுக் கதவைத் தட்டி 'நமோ நாராயண' என்று இயம்புவான். கடைத்தரமான சாதுவோ தனக்குப் பிக்ஷை தராதவர்களிடத்துக் கூச்சலிட்டுச் சண்டை போட முற்படுவான்.

தலைத்தரமான சாதுவோ மலைப்பாம்பு போன்று நடந்து கொள்கிறான். ஓரிடத்தில் அன்னவன் அமர்ந்திருக்கிறான். அவனைத் தேடி உணவு தானாக வருகிறது. மலைப்பாம்பு உணவை நாடி எங்குமே நகருவதில்லை. தன் வாயண்டை வருவதை அது பிடித்துப் பயன் படுத்திக்கொள்ளும். சின்னஞ்சிறு வயதிலிருந்தே பிரம்மச்சாரியாயிருந்த இளம் சந்நியாசி ஒருவன் பிக்ஷை எடுப்பதற்கு வெளியே கிளம்பினான். இளம் மங்கை ஒருத்தி அவனுக்கு பிக்ஷை வழங்கினாள். அவளுடைய ஸ்தனபாரத்தைப் பார்த்த சாது அவள் நெஞ்சில்பிளவைகள் தோன்றி இருக்கின்றனவென்று கருதினான்.பிறகு அதைப்பற்றி அவன் விசாரித்தான். அவ்வீட்டிலிருந்த வயது முதிர்ந்த மாதுக்கள் அதற்கேற்ற காரணத்தை மொழிந்தார்கள். 'இந்த மங்கை பிள்ளைபெறும் பக்குவம் அடைந்திருக்கிறாள். பிள்ளையைப் பெற்றான பிறகு அதற்குப் பாலூட்டுவதற்கு முற்கூட்டியே கொங்கைகள் தோன்றியுள்ளன. ஒவ்வோர் உயிர்க்கும் உணவு வழங்குதற்கான உபாயத்தைக் கடவுள் முற்கூட்டியே அமைத்து வைக்கிறார்' என்றார்கள். அதைக் கேட்ட சாது அதிசயப்பட்டான். அவன் இயம்பியதாவது: 'அப்படியானால் பிக்ஷையை நாடி நான் வெளியே போக வேண்டியதவசியமில்லை. எனக்குத் தேவையாயுள்ள உணவு ஏற்பாட்டைக் கடவுள் முற்கூட்டியே அமைத்திருக்கக்கூடும்!''

பரமஹம்சதேவர்: "ஆனால் சுயப்பிரயத்தனம் எடுத்துக்கொள்ளுவது அவசியமென்று யாருக்குத் தோன்றுகிறதோ அவர்கள் அதன்படி சுயப்பிரயத்தனம் பண்ணுவதுதான் முறை. சுயப்பிரயத்தினத்தை நிறுத்திவிடக்கூடாது."

# மலைவளர் காதலி

(தாயுமானவர் இயற்றியது)

பதியுண்டு நிதியுண்டு புத்திரர்கள் மித்திரர்கள்
பக்கமுண்டு எக்காலமும்
பவிசுண்டு தவிசுண்டு திட்டாந்த மாகயம
படரேனுந் திமிரமறுகாக்
கதியுண்டு ஞானமாங் கதிருண்டு சதிருண்டு
காயசித் திகளுமுண்டு
கறையுண்ட கண்டர்பால் அம்மை நின்தாளில்
கருத்தொன்றும் உண்டாகுமேல்
நதியுண்ட கடலெனச் சமயத்தை யுண்டபர
ஞானஆனந்த ஒளியே
நாதாந்த ரூபமே வேதாந்த மோனமே
நானெனும் அகந்தைதீர்த்தேன்
மதியுண்ட மதியான மதிவதன வல்லியே
மதுசூதனன் தங்கையே
வரைராஜனுக் கிருகண் மணியாய் உதித்தமலை
வளர்காதலிப் பெண்உமையே.

பொருள் ஒன்று. அது பல பாங்குகளில் தன்னை விளக்கிக் கொண்டிருக்கிறது. இயற்கையில் அதற்குச் சான்று ஒன்று எடுத்துக் கொள்வோம். நீரையும், சூரிய வெளிச்சத்தையும் சான்றுகளாக வைத்துக்கொண்டு ஆராய்வோம். நீர் என்னும் பொருள் ஒன்று. அது கட்புலனாகாத ஆவியாகக் காற்றில் கலந்திருக்கிறது. வெள்ளை வெளேரென்று மிளிர்கிற வெள்ளை நீராவியாக நீராவி எந்திரத்தினின்று அது வெளியே வருகிறது. பிறகு கார்மேகம், வெண்மேகம், செம்மேகம் ஆகியவைகளாக வானவெளியில் அது இலங்குகிறது. சற்று உறைந்த நிலையில் மூடுபனியாகவும், மஞ்சு ஆகவும், துளிப் பனியாகவும் திகழுகிறது. அடுத்தபடி மழையாக அது பொழிகிறது. அதற்கும் அடுத்தபடி ஆலங்கட்டியாக அது வடிவெடுக்கிறது. ஹிமாசலம் போன்ற இடங்களில் உறை பனியாகவும் அது அமைந்திருக்கிறது. பொருள் ஒன்று எனினும் அதற்கு வடிவங்கள் இத்தனை இருக்கின்றன. இதேவிதத்தில் பரவஸ்துவானது இகலோகத்திற்குரிய இத்தனையுமாக இலங்கிக்கொண்டிருக்கிறது. பரம்பொருளாயிருக்கிற பொழுது அது சுத்த சிவம் அல்லது சதா சிவம், அல்லது நிர்குண பிரம்மம். அதே பொருள் சகுண பிரம்மமாக இலங்கும்பொழுது அதற்குப் பார்வதி பரமேஸ்வரன் என்று பெயர். பார்வதி சமேதராயிருக்கிறபொழுது இம்மைக்குரிய ஜடவஸ்துக்கள் அனைத்துமாகவும், சேதன வஸ்துவாயிலங்கும் ஜீவகோடிகள் அனைத்துமாகவும் அவர் இலங்குகின்றார். ஜகத்தாகவும், ஜீவனாகவும் இலங்குகிறபொழுது பிரகிருதித் தத்துவமாக இலங்குவது அம்பிகை. புருஷ தத்துவமாக இலங்குவது சிவம். சிவமும், சக்தியும் இரண்டு மூர்த்திகள் அல்லர். ஒரு பொருளின் இரண்டு நிலைகள் சிவ சக்தி என்று பெயர் பெறுகின்றன. தீ சிவம் என்றால் அதன் சுடுகிற தன்மை சக்தி. பால் சிவம் என்றால் அதன் வெண்மை நிறம் சக்தி. ரத்தினம் சிவம் என்றால் அதன் பிரகாசம் சக்தியாகிறது. இதே அம்பிகை ஜடநிலையினின்று சேதன நிலைக்கு வருவதால் இவள் பர்வதராஜ புதல்வி அல்லது பார்வதி என அழைக்கப்பெறுகிறாள். வரை என்றால் மலை. வரை ராஜன் என்பது ஹிமவான் என்னும் இமயமலைக்குரிய பெயராகும். அவன் பெற்றெடுத்த செல்வியாதலால் ஹைமவதி என்பதும் இவளுக்கு அமைந்துள்ள நாமமாகிறது.

உயிர்களுடைய முன்னேற்றத்திற்குத் தேவையாயிருப்பவைகளை யெல்லாம் அன்புகூர்ந்து இவள் நல்கி வருகின்றாள். அன்னையிடமிருந்து இகபரத்துக்குரியவைகளை யெல்லாம் நாம் பெறமுடியும் என்னும் கோட்பாடு இப்பாடலில் அமைந்திருக்கிறது.

இத்தகைய சிவசக்திக்குக் கணவன், மனைவி என்ற உலக இணக்கத்தைப் புராணம் கற்பித்திருக்கிறது. பிறகு அம்பிகை திருமாலின் சகோதரியாகக் கருதப்படுவதும் புராணத்தின் போக்கு ஆகும்.

'நதியுண்ட கடலெனச் சமயத்தை உண்ட பர ஞான ஆனந்த ஒளியே' என்கிறார் தாயுமானவர். நெடுந்தூரத்திற்கப்பால் மலையில் உற்பத்தியாகிப்பாய்ந்துவருகிறநதியானது கடலில் சென்று ஒடுங்குகிறது. நதி என்னும் தன்னுடைய தனி வியக்தியையும் அது அப்பொழுது இழக்கிறது. அதே விதத்தில் வெவ்வேறு சமயங்களை அனுஷ்டித்துப் பரிபக்குவம் அடைகின்ற ஆத்ம சாதகர்

கள் தங்கள் தனி வியக்தியைத் துடைத்து விட்டுப் பரவஸ்துவில் லயமாகின்றனர். அத்தகைய பரவஸ்துவாயிருப்பவள் அன்னை பராசக்தி. ஞானத்துக்கு அவள் இருப்பிடம். அவளே ஜீவகோடிகளனைத்திடத்தும் ஆனந்தமாக இலங்குகின்றாள். எங்கும் ஞானப்பிரகாசமாய்ப் பொலிந்துகொண்டிருப்பவளும் அவளே. ஓசைகளெல்லாம் அவளிடத்து அடங்கியிருப்பதால் அவள் நாதாந்த ரூபமாகப் போற்றப்படுகிறாள். வேதத்தின் அந்தம் வேதாந்தம். வேதங்களனைத்தும் பரவஸ்துவின் மகிமைகளை ஓதிக்கொண்டிருக்கின்றன. அந்த ஓசை ஒலிக்கெல்லாம் அப்பால் பரதேவதையாகிய அம்பிகையிருப்பதால் அவள் வேதாந்த மோனமே எனப் போற்றப் பெறுகிறாள். ஜீவாத்மன் தனது அகங்கார மமகாரத்தை ஒதுக்கிவிட்டுப் பரம்பொருளில் ஒன்றுபடுவது குறிக்கோள். அப்போது அவனுடைய பிரக்ஞை பிரக்ஞானமாயிருக்கின்ற பரவஸ்துவில் இரண்டற்ற நிலை யெய்துகிறது. இக்கோட்பாடு 'நான் எனும் அகந்தை தீர்த்து என் மதியுண்டமதியான மதிவதன வல்லியே' என்பதில் அடங்கியிருக்கிறது. பூரணச் சந்திரனிடத்துத் தனிச் சிறப்பு ஒன்று உண்டு. பார்க்கப் பார்க்கக் கண் கூசுவது சூரியனுடைய பாங்கு. பார்க்கப் பார்க்கக் கண் குளிர்வது சந்திரனுடைய பாங்கு. அத்தகைய இனிய பாங்கை அன்னை பராசக்தி படைத்திருப்பதால் அவள் மதிவதனை எனப் போற்றப் பெறுகிறாள். நிறை நிலாவுக்கு நிகரான முகவிலாசத்தை உடையவள் என்பது இதன் பொருள். வல்லியே என்னும் சொல் பூங்கொடியே எனப் பொருள்படுகிறது. ஆக அன்னை பராசக்தி மதிவதன வல்லியே எனப்போற்றப்பெறுவது முற்றிலும் பொருத்தமாயிருக்கிறது. மதுசூதனன் தங்கையே—நாராயணனுக்குத் தங்கையாயிருப்பவளே என அது பொருள்படுகிறது. வரைராஜனுக்கு என்பது இமயமலை மன்னனுக்கு எனப்பொருள்படுகிறது. இரு கண் மணியாய் உதித்த—சரீரத்தில் அமைந்துள்ள அவயவங்கள் அனைத்துக்கும் சோபை தருகிற இரண்டு கண்களின் மணிபோன்று அவதாரம் செய்திருப்பவளே என்பது இச்சொற்றொடரின் உட்கருத்து. உமையே-உமாதேவியே. கறையுண்ட கண்டர்பால் அம்மை-உலகத்தை உய்வித்தல் பொருட்டு அதை விழுங்க வந்த விஷத்தைத் தாமே எடுத்து உண்டு அதைக் காப்பாற்றியதால் நீலகண்டன் என்னும் பெயர் தாங்கியுள்ள சிவ பெருமானது இடப்பக்கம் இடம் பெற்றிருக்கின்ற தாயே. நின் தாளில் கருத்தொன்றும் உண்டாகுமேல்—உன்னுடைய திருவடிகளில் எனக்குப் பக்தி வாய்க்குமானால் பிறகு எனக்குக் குறையேதுமில்லை. இகம், பரம் ஆகியவைகளில் எனக்கு என்னென்ன வாய்க்குமென்று ஆராய்ந்து பார்த்தால் பதியுண்டு-மண்ணுலகில் வசித்திருப்பதற்குப் பொருத்தமான வாசஸ்தலம் கிடைத்திருக்கிறது. நிதியுண்டு-இகலோக வாழ்க்கை இனிது நடைபெறவேண்டுமானால் அதற்குச் செல்வம் முற்றிலும் அவசியமானது. தேவையான செல்வம் தானாக எனக்கு வந்து வாய்க்கிறது. புத்திரர்கள்-மகப்பேறும்; மித்திரர்கள்–நண்பர்களும்; பக்கம்-உற்றார் உறவினரும், உண்டு-எனக்கு வந்து வாய்க்கிறார்கள். எக்காலமும்-காலமெல்லாம்; பவிசுண்டு-வல்லமை படைத்தவனாக யிருக்கிறேன். தவிசு உண்டு–ஆங்காங்கு அமர்வதற்கேற்ற ஆசன வகைகள் உண்டு. திட்டாந்தமாக-வெட்டவெளியாக; யமபடர் எனும் திமிரம் அணுகா—யம தூதர்கள் என்று இயம்பப்படுகிற அக்ஞான இருள் வந்து அணுகாதபடி; கதியுண்டு-மோட்ச சாம்ராஜ்யம் உண்டு. ஞானமாம் கதிருண்டு-சூரியப் பிரகாசத்திற்கு நிகரான ஆத்ம ஞானத்தெளிவு வந்தமைகிறது. கதிர் உண்டு-அழகுபொருந்திய மேன்மையுண்டு. காயசித்திகளும் உண்டு–உடல் வாழ்க்கையைச் சீர்கேடு அடையாதபடி நல்ல நிலையில் வைத்திருக்கின்ற ஒழுங்குப்பாடான வாழ்க்கை முறையும் தானே வந்தமைகிறது. இவையாவும் இகலோகத்துக்குரிய சம்பத்துக்களாகின்றன. பாரமார்த்திகப் பெருநிலை எனக்கு எப்படி வந்து வாய்க்கிறது என்று ஆராய்ந்து பார்க்கின் 'நான் என்னும் அகந்தை தீர்த்து என் மதியுண்ட'-ஜீவபோதத்துக்கேதுவான சிற்றறிவு என்னிடத்திலிருந்து அகன்று போகும்படி செய்து நான் படைத்துள்ள அகங்காரத்தைத் துடைத்துத் தள்ளிவிட்டுப் பரத்தில் இரண்டறக் கலக்கும்படி செய்கின்ற வல்லமை தாயே உனக்கு உண்டு.

---

# அருள் நெறி

(ஸ்ரீ ராமகிருஷ்ணரின் சிஷ்யரான சுவாமி அபேதானந்தரின் போதனை)

மனதின் இயல்பு சலித்துக்கொண்டு இருப்ப தாகும். மனம் சுலபத்தில் அடங்குவதுஇல்லை. மனத்தையடக்குவதற்கு உபாயம் என்ன வென்று அர்ஜுனன் ஸ்ரீ கிருஷ்ணரைக் கேட் டான். மனத்தை அடக்குவதற்கு இடைவிடாத அப்பியாசமும், வைராக்கியமுமே உபாயங்க ளாகும் என்று ஸ்ரீ கிருஷ்ணர் பகர்ந்தார். மனத் தோடு போராடிக்கொண்டே இருக்கவேண்டும். ஜபம் செய்யும் நேரத்தில் கடவுள் சிந்தனையைத் தவிர மற்ற எண்ணங்கள் மனதில் வரலாம். அப்படி வரும்பொழுது விழிப்புடன் கவனித் துப்பார்த்து அவற்றை மனதிலிருந்து விரட்டி ஓட்டவேண்டும். ஜபம் செய்யும்பொழுது கடவு ளைப்பற்றிய சிந்தனையே மனதில் இருக்க வேண்டும். கடவுள் எண்ணத்தை மனதில் உறுதிப்படுத்தவும், மற்ற எண்ணங்களை மனதி லிருந்து விரட்டி ஓட்டவும் நாள்தோறும் முறையாகப் பயிற்சி பெற்று வரவேண்டும். நெடுநாள் பயிற்சிக்குப் பிறகு மனது அமைதி யோடு இருந்து தியானம் செய்யும். தியானம் கைகூடவேண்டும் என்று பிரார்த்தனை செய்து கொள்.

நல்ல கனவு ஏற்படுவது நல்லசம்ஸ்காரத் துக்கு அறிகுறியாகும். கனவில் தெய்வக் காட்சிகள் உண்டாகலாம். தெய்வக் காட்சி களைக் காணும்பொழுது அத் தெய்வங்களிடம் தூய்மையும், பக்தியும், விசுவாசமும் வேண்டு மென்று பிரார்த்தனை செய்துகொள். சிலர் ஜபம் செய்வதற்கு ஜபமாலை உபயோகப் படுத்துவது உண்டு. ஆரம்பத்தில் ஜபத்துக்கு ஜபமாலை பயன்படுத்துவது உதவியாக இருக் கும். ஒருநாளைக்கு இத்தனை முறைதான் இறை வன் நாமத்தை ஜபிக்கவேண்டும் என்று வரையறை செய்துகொள்ளவேண்டும். பிறகு அந்தத் திட்டப்படி ஒழுங்காக ஜபம் செய்து வரவேண்டும். ஜபத்தில் மனம் ஸ்திரம் ஆக ஆக ஜபமாலை உதவியின்றியே ஜபம் செய்ய லாம். ஜபத்தில் மனம் ஆழ்ந்து போகும்பொழுது தியானம் கைகூடுகிறது.

குரு பக்தி அவசியமானது. குருவினிடத்தில் உன்னை முற்றும் ஒப்படைத்துவிடு. குரு உன் னைத் திருத்தி அமைப்பதில் முழுப்பொறுப்பை ஏற்றுக்கொள்கிறார். ஆனால் குருவினிடத்தில் பக்தி இல்லாது உன்னுடைய மன இச் சைப்படி நீ நடந்துகொள்வாயானால் குரு பொறுப்பேற்றுக் கொள்ளமாட்டார். குருபக்தி உடையவனாக இருந்து குருவினுடைய அறி வுரைகளைக் கடைப்பிடிக்கவேண்டும். குருவின் சொற்படி சாதனை செய்யாவிட்டால், நீ சாதனையில் முன்னேற்றம் அடையமுடியாது. ஒவ்வொருவருடைய இயல்பை அறிந்து அவர வர்களுக்கு ஏற்ற சாதனைமுறையைக் குரு நிர்ண யிக்கின்றார். மண்ணின் தன்மையை அறிந்து பயிர் செய்வதுபோன்று சாதகனின் இயல்பை அறிந்து குரு சாதனை முறையைப் புகட்டுகின் றார். சாதனையில் மேலே போகப்போக ஆத் மீக அனுபவங்கள் உண்டாகின்றன. ஸ்ரீ ராம கிருஷ்ணர் உயர்ந்த மன நிலையில் இருந்தார். அவருடைய மனநிலையை அறிந்துகொள்ளு வதற்கு உன்னுடைய மனநிலையும் அந்த அள விற்கு உயரவேண்டும். அவர் அந்நிலை அடை வதற்கு அல்லும் பகலும் தம் சக்தி முழுவதை யும் பயன்படுத்திச் சாதனையில் ஈடுபட்டார். அவர் போன்று நீயும் சாதனை செய்யவேண் டும். முழுமனதுடன் இறைவனை இங்ஙனம் பிரார்த்தனை செய். "இறைவா, சலியாதபக்தி யையும், உறுதியான நம்பிக்கையையும் எனக்கு நீ அளிப்பாயாக. என் இஷ்டதெய்வத்தின் காட்சியைப்பெறுவதற்கு நீ அருள்புரிவாயாக." முழுமனதோடு செய்கின்ற பிரார்த்தனைக்குச் சக்தி அதிகம்.

நாள்தோறும் தியானம் செய்யும் பழக்கத் தைக் கையாண்டு வா. முதலில் குரு தியானமும் பின்பு இஷ்டதெய்வ தியானமும் செய். "ஓதா மல் ஒருநாளும் இருக்கவேண்டாம்" என்பது மூதுரை. காலை, மாலை ஆகிய இருவேளைகளி லும் சாஸ்திரங்களை ஓதுதல் வேண்டும். ஜபம், தியானம், வழிபாடு ஆகியவற்றைத் தினமும் இரண்டு வேளைகள் செய்து வரவேண்டும். இத் தகைய நற்பழக்கங்களைச் சோர்வின்றி நாள் தோறும் மேற்கொள்ளுதல் வேண்டும்.

அடங்காத மனது தீயசிந்தனைகளுக்கு இடம்

தரும். மனம் அடங்குகிறபொழுது தீயசிந்தனை கள் நாசமாகின்றன. நல்ல எண்ணங்கள் உள்ளத்தில் உதிக்கும்படி பார்த்துக்கொள். நல்ல செயல்களில் ஈடுபடுகிறபொழுது உள்ளத்தில் நல்ல எண்ணங்கள் தோன்றுகின்றன. கெட்ட எண்ணங்கள் உள்ளத்தில் வரும்பொழுது விவேகத்தைக்கொண்டு அவற்றை விரட்டி ஓட்டு. தீயபழக்கங்களுக்கு நீ இடம் தந்து விட்டால் தீய எண்ணங்கள் உள்ளத்தில் தோன்றும். நல்ல பழக்கங்களில் ஈடுபடுவாயானல் தீய எண்ணங்களுடைய ஆதிக்கம் குன்றிப் போகும். அப்பொழுது நல்ல எண்ணங்கள் உள்ளத்தில் வலிவு பெறுகின்றன. கீதை, உபநிஷதங்கள், ராமகிருஷ்ணரின் உபதேச மொழிகள் போன்ற நூல்களை ஆழ்ந்து படித்து வா. கெட்ட சகவாசம் கெட்ட எண்ணங்களுக்கு வலிவு தரும். ஆகையால் கெட்ட சகவாசத்தை ஒதுக்கிவிட்டு நல்லார்களுடைய கூட்டத்தில் சேர்ந்துகொள். உன் உள்ளத்தில் நல்ல எண்ணங்களைத் தோற்றுவிப்பதற்குச் சத்சங்கம் மிகவும் உதவியாக இருக்கும். வாய்ப்புக்கிடைக்கும் பொழுதெல்லாம் நல்லார் கூட்டத்தை நாடிப் போய் விடு. சத்விஷயம் எங்கு நடந்தாலும் அதில் பங்குகொள்.

ஆரம்பநிலையில் உள்ள சாதகன் உணவு விஷயத்திலும் கருத்துச் செலுத்தவேண்டும். சத்வகுணத்தை வளர்க்கும் சாத்வீக உணவை ஏற்றுக்கொள். ரஜோகுணத்தையும், தமோ குணத்தையும் வளர்க்கின்ற உணவுகளைஒதுக்கி வை. ஐம்பொறிகளின் வாயிலாகப் புறத்தே சென்று கொண்டிருக்கும் மனத்தை ஒன்று திரட்டி உள்முகமாகத் திருப்பிப் பழகு. அப்படி உள்முகமாகத் திருப்பப்பட்ட மனதை உன் இஷ்ட தெய்வத்தின்மீது நிலைநிறுத்து. அப்படிச் செய்வதன் மூலம் மனதைத் தியானத்தில் ஈடுபடச் செய்வது உனக்குச் சுலபமாகும். இஷ்ட தெய்வத்தினுடைய மந்திரத்தை மன ஒருமுகப் பாட்டுடன் ஜபித்து வந்தால் மனம் இஷ்ட தெய்வத்தின்மீது ஒருமுகப்படும். ஜபம் செய்வதில் மகிழ்ச்சியும், மனதிற்கு நிலைபேறும் உண்டானல் தியானம் எளிதில் கைகூடும்.

வாசனை மிகவும் பொல்லாதது. சில வாசனைகள் நம் வாழ்க்கையையே குலைத்துவிடும். அத்தகைய வாசனைகளை விவேகத்தைக்கொண்டு விரட்டி ஓட்டவேண்டும். நித்தியமான பொருள்கள் யாவை, அநித்தியமான பொருள்கள் யாவை என்பதைப் பற்றிய விசாரணை நிகழ்ந்து கொண்டிருக்கவேண்டும். அநித்தியப் பொருள்களின் அழிவைப்பற்றி நினைத்து அநித்தியப் பொருள்களிடமிருந்து மனதை மீட்டு எடுக்கவேண்டும். அநித்தியப் பொருள்களால் மனம் இழுக்கப்பட்டு அவைகளை அனுபவிக்கவேண்டும் என்ற மோகம் மனதிற்கு வந்துவிடக் கூடாது. பூர்வீக வாசனை அத்தகைய மோகத்தில் மனதைச் சிக்கவைத்து விடும். நீ விழிப்புடன் இருந்து அம்மோகத்தில் அகப்பட்டுக் கொள்ளாது உன் மனதைத் தெய்வத்தின்பால் திருப்பு. கெட்ட வாசனையில் இருந்து மனதை விடுவிப்பது அவ்வளவு சுலபமன்று. சத்சங்கத்தாலும், ஜபத்தாலும், தியானத்தாலும், பற்றற்றுக் கர்மம் செய்வதாலும், ஆத்ம விசாரத்தாலும், இடைவிடாது மனம் நித்தியப் பொருளை நாடுவதில் ஈடுபட்டிருக்கும்படி செய். அப்பொழுதுதான் உன் மனம் கெட்ட வாசனையில் இருந்து விடுபடும். எத்தனையோ ஜன்மங்களின் வாசனைகள் சேர்ந்து நம் பிறப்பிற்குக் காரணமாகின்றன. அவைகளை எல்லாம் அழித்துத் தள்ள நீ சாதனை புரிந்தாக வேண்டும். குற்றமற்ற சில வாசனைகளைத் திருப்திப்படுத்தலாம். நல்ல தின்பண்டமொன்றைத் தின்ன வேண்டுமென்ற ஆசை எழுந்தால் அப்பண்டத்தைத் தின்று அவ்வாசையைத் தீர்த்துக் கொள்ளலாம். அதனல் குற்றமொன்றுமில்லை. ஸ்ரீ ராமகிருஷ்ணருக்குப் பட்டாடை கட்டிக் கொள்ள வேண்டுமென்ற சிறு ஆசை எழுந்தது. பட்டாடை ஒன்றைக் கட்டிக்கொண்டு "மனமே, பட்டாடை கட்டுவதன் மூலம் வரும் இன்பத்தை இப்பொழுது நன்கு அனுபவித்துக் கொள்" என்று கூறினர். சிறிது நேரத்திற்குள் அந்த ஆசை தீர்ந்துவிட்டது. உடனே பட்டாடையை அவிழ்த்து எறிந்து விட்டார். இது போன்ற குற்றமற்ற ஆசையை நிறைவேற்றிக் கொள். ஆனல் மனதைப் பாழ்படுத்தும் ஆசைகளை அழித்து விடவேண்டும். உலக சம்பந்தமான எந்த ஆசையையும் கடவுள் சம்பந்தமான ஆசையாக மாற்றி அமைப்பது ஆசையை அழிப்பதற்கு ஓர் உபாயமாகும்.

# அம்பிகையின் மகிமை

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் 1970ஆம் ஆண்டு திருப்பராய்த்துறை தபோவனம் சக்திபூஜை அந்தர் யோகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

[ *134* ஆம் பக்கத் தொடர்ச்சி ]

அம்பிகை ஆயிரக்கணக்கான தலைகளையும், முகங்களையும், கண்களையும், உடையவளாக இருக்கின்றாள் என்று போற்றப்படுகின்றாள். காளிகாதேவிக்குக் கணக்கில் அடங்காத சொரூபங்கள் இருக்கின்றன. சாது ஒருவர் காளிகா தேவியின் பீஜமந்திரத்தைத் தெனாலிராமனுக்கு உபதேசித்தார். அப்பீஜ மந்திரத்தை ஜபித்தால் அம்பிகையின் தரிசனம் கிடைக்குமென்று அவனுக்குக் கூறியிருந்தார். அவன் அந்த மந்திரத்தை ஜபித்து வந்தான். அவனுக்கு அம்பிகை ஆயிரம் முகங்களையும், இரண்டு கைகளையும் உடையவளாகக் காட்சி தந்தாள். அக்காட்சியைக் கண்ட தெனாலிராமன் கொல்லென்று சிரித்தான். சிரிப்புக்குக் காரணம் கேட்டபொழுது அவன் நகைச்சுவையோடு கூடிய பதில் அளித்தான். அவன் தந்த பதிலாவது: "தாயே, உமக்குச் சளிபிடித்தால் நீ என்ன செய்வாய்? ஒரு மூக்குள்ள எங்களுக்குச் சளி பிடித்துக்கொண்டால் அதைச் சிந்துதற்கு இருகைகள் போதுவது இல்லை. உமக்கோ ஆயிரம் மூக்குகள் இருக்கின்றன. இரண்டு கைகளை வைத்துக்கொண்டு உமக்குச் சளி பிடித்துக்கொண்டால் எப்படிச் சிந்துவாய்?" யுக்திபூர்வமாக ஆராயுமிடத்தில் அவன் கூறியது சரி. ஆனால் அது விகடத்தோடு கூடிய பதிலாகும். அவன் அம்பிகையிடம் விகடமாக நடந்துகொண்டதால் "நீ விகடனாகவே இருக்கக் கடவாய்" என்று அம்பிகை பகர்ந்தாள். ஆயிரம் முகங்கள் உடையவள் என்பது எண்ணிச்கையைக் குறிப்பதன்று. ஜீவன் எந்த நிலையில் இருந்தாலும் அந்த நிலையில் அம்பிகை வடிவெடுத்து இருக்கின்றாள். இத்தனை ஜீவர்களாக அம்பிகை வடிவெடுத்து இருக்கின்றாள் என்பதுதான் அடிப்படை உண்மையாகும். அம்பிகையைத் தரிசனம் செய்வதற்கு அம்பிகையைத் தேடிக்கொண்டு நாம் எங்கேயோ செல்ல வேண்டியது இல்லை. எல்லா உயிர்களின் வடிவங்களாக அம்பிகையே இருக்கின்றாள். "எங்கும் நிறைபொருளாக இருக்கின்ற உம்மைக் கோயிலுக்குள் மட்டும் இருக்கிறாய் என்று உமக்கு எல்லை போடுகிறேன். அங்ஙனம் எல்லை போடும் என்னை மன்னிப்பாயாக. இங்ஙனம் சான்றோர் ஒருவர் பகர்கிறார். ஆலய வழிபாடு செய்யும்பொழுது நமக்கு முன்னே நின்று வழிபடுகிறவர்களைப் பார்த்துச் சந்நிதியை மறைக்காதீர்கள் என்று சொல்லுகிறோம். எங்குத் திரும்பிப் பார்த்தாலும் எல்லா உயிர்களிடத்தும் இருக்கின்ற அம்பிகையை அங்கீகரிப்பதில்லை. ஆலயத்தில் மட்டும் அம்பிகை இருப்பதை அங்கீகரிக்கிறோம். எல்லா உயிர்களிடத்திலும் அம்பிகை இருப்பதை அங்கீகாரம் செய்வது ஆராதனையாகும். அந்நிலைக்கு மனப்பான்மையைத் திருத்தி அமைப்பது சிறந்த ஆராதனையாகும். சாதாரண மனநிலையில் அம்பிகையை ஒரு குறிப்பிட்ட இடத்தில் இருப்பவளாக அங்கீகரிக்கின்றோம். சில குறிப்பிட்ட கிரியா விசேஷங்கள்தாம் கடவுள் ஞாபகத்தை நமக்கு ஊட்டுவதாகவும் இருக்கின்றன. ஆரம்ப நிலையில் உள்ளவர்கள் கோயிலைப் பார்க்கும் பொழுதுதான் கடவுளைப்பற்றி நினைக்கின்றார்கள். சாதனையில் ஆரம்பநிலையில் உள்ளவர்களுக்குக் கோயில்கள் அவசியமாகின்றன. அத்தகையவர்கள் கோயில்கள் மூலமாகத்தான் வழிபாட்டைத் துவக்கியாகவேண்டும். மனம் பண்பட்டு மேலே வரவர எல்லா உயிர்களின் வடிவங்களிலும் அம்பிகையைப் பார்க்கும் மனநிலை வந்து அமைகிறது. மேற்கொள்ளும் எல்லாச் செயல்களும் அப்பொழுது தேவாராதனைகள் ஆகின்றன. இது வழிபாட்டின் உச்ச நிலையாகும். இது நம் லட்சியமாகும்.

ஸ்ரீ கண்டார்த்தசரீரிணி என்பது அம்பிகைக்கு ஒரு பெயர். ஸ்ரீ கண்டன் என்பது சிவனாரைக் குறிக்கிறது. சிவனாரின் ஒருபகுதியாக அம்பிகை இருக்கின்றாள். அர்த்த நாரீசுவரர் வடிவத்தில் பாதி சிவ சொரூபமாகவும், மற்றொருபாதி சக்தி சொரூபமாகவும் இருப்பதைக் காணலாம். இவ்வடிவத்தின் தத்துவம் ஆராய்ச்சிக்கு உரியது. சக்தியின் சொரூபம்

சரீரமாக அமைந்திருக்கிறது. சரீரத்தில் இலங்குகின்ற அறிவு சிவசொரூபமாகிறது. சூரிய கிரணம், மூல நிலையில் சிவ சொரூப மாக இருக்கிறது. ஏழு நிறங்களாக அது பிரியும்பொழுது சக்தி சொரூபமாகிறது. ஓசை அமாத்திரப் பிரணவமாக இருக்கும் பொழுது சிவசொரூபம். அது ஏழு சுரங்களாக வரும் பொழுது சக்தி சொரூபமாகிறது. பொருள் தோன்ருத நிலையில் மூலப்பொருளாக இருக் கும் பொழுது சிவம் ஆகின்றது. பிரபஞ்ச மாகத் தோற்றத்துக்கு வருகிறபொழுது சக்தி சொரூபமாகிறது. அம்பிகை பிரபஞ்சமாக வந் திருக்கும் பொழுது பஞ்சேந்திரியங்களுக்கும், மனம் புத்திக்கும் தென்படுகின்ருள். பிரபஞ் சத்தின் கண் இலங்குகின்ற அறிவு சிவ சொரு பம். மொழியை எடுத்துக்கொண்டால் உயிர் எழுத்துக்கள் சிவ சொரூபம். மெய்யெழுத்துக் கள் சக்தி சொரூபம். உயிர் மெய் எழுத்துக்கள் சிவசக்தி சொரூபம். மெய்யெழுத்துக்கள் இல்லா விட்டால் உயிர் எழுத்தினுடைய மகிமை குறை கிறது. அங்ஙனம் சக்தியினுடைய சாந்நித்தி யம் இல்லாவிட்டால் சிவனுடைய மகிமை விளங்காது. தமிழில் உயிர்மெய்எழுத்துக்கள் குறைவாகவும், ஸம்ஸ்கிருதத்தில் அவை அதிக மாகவும் இருக்கின்றன. சக்தி மயமாக இருக் கின்ற மெய்யெழுத்துக்கள் அதிகமாகின்ற அளவு உயிர் எழுத்துக்களுக்குச் சக்தி அதிக மாகின்றது. உயிர் படிப்படியாக மேல் நிலைக்கு வரும் பொழுது அறிவைப் பலப்படுத்துகின்ற சக்தி அதனிடத்து அதிகரிக்கின்றது. ஒரு மூங்கிலில் கயிற்றைக் கட்டி மீட்டினல் அதி லிருந்து ஓசை உண்டாகும். வீணை என்ற இசைக்கருவி செய்து, அதிலிருக்கும் கம்பிகளை மீட்டினல் சப்த ஸ்வரங்களும் வெளிப்படுகின் றன. மானுட அமைப்பு அறிவை வளர்ப்பதற்கு ஏற்ற நல்ல கருவியாகிறது. மானுட நிலைக்கு வந்த பின் சரீரத்தை நன்கு பயன்படுத்துவது ஆத்மசாதனமாகிறது. மானுடன் அடைந் திருக்கும் பரிபாகத்தை ராமகிருஷ்ணர் எளி தில் அறிந்து கொள்ளுவார். தூங்குகின்ற பொழுது ஒருவருடைய முகத்தைப் பார்த்து அவர் அடைந்துள்ள பரிபாகம் முழுவதையும் சொல்லி விடுவார். மனம் வேலை செய்யாதிருக் கும் பொழுது அதனிடத்து ஏற்கனவே உள்ள பரிபாகம் தெளிவாக விளங்குகிறது. விழித் திருக்கும் ஒருவனுடைய கையைத் தூக்கிப் பார்த்து விட்டு அவனிடத்து உள்ள நலம், கேடு களை ஸ்ரீ ராமகிருஷ்ணர் உள்ளபடி சொல்லி விடுவார். இவ்வுண்மையை ஒரு உபமானத் தின் மூலம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் விளக்குகின்ருர். "சந்தையில் காளைமாடு வாங்குகின்றவன் மாட் டின் வாலைத் தொட்டுப் பார்ப்பான். சுறுசுறுப் பான காளைமாடு வாலைத் தொட்டதும் துள்ளிக் குதிக்கும். அப்படித் துள்ளிக் குதிக்கின்ற மாடு வேலைக்கு நன்கு உதவும் என்று வாங்கி வரு வார்கள். வாலைத் தொட்டால் சில காளைமாடு கள் அசையாது நிற்கும். அத்தகைய மாடு வேலைக்கு உதவாது என்று தள்ளிவிடுவார்கள். மக்களுக்கிடையில் தகுதி வாய்ந்தவர்களை ஸ்ரீ ராமகிருஷ்ணர் சுலபத்தில் கண்டு பிடித்து விடுவார். நரேந்திரன் சிறுவனுக இருந்த பொழுது வீட்டின் மாடிப்படியில் விளையாடிக் கொண்டிருந்தான். மாடிப்படியிலிருந்து தவறி விழுந்து புருவத்தில் காயமாகிவிட்டது. அந்தத் தழும்பு அவனுடலில் ஆயுள் முழுவதும் இருந் தது. அந்தத் தழும்பைச் சுட்டிக்காட்டி ராம கிருஷ்ணர் பகர்ந்ததாவது: "நரேந்திரனிடத் தில் தெய்வீக ஆற்றல் மிகுதியாக இருந்தது. அதன் பெரும் பகுதியை நரேந்திரன் மாடிப் படியில் இருந்து விழுந்த நிகழ்ச்சியின் வாயி லாக அம்பிகை கறந்தெடுத்து விட்டாள். அந் நிகழ்ச்சி நிகழாது இருந்தால் அவன் ருத்ராம்ச மாக விளங்கியிருப்பான். உலகத்தையே ஓர் ஆட்டு ஆட்டி வைத்திருப்பான்." இத்தகைய குறிப்பு ராமகிருஷ்ணரால் கொடுக்க முடிந்தது.

அம்பிகை இத்தகைய பேராற்றல் படைத்த மூர்த்திகளைத் தேவையான அளவு உண்டு பண்ணுகிருள். அம்பிகை எந்தெந்தக்காலத்தில் என்னென்ன காரியம் செய்வதற்கு யார் யார் தேவையோ அவர்களைத் தோற்றுவிக்கின்ருள். பிரபஞ்சத்தின் திட்டம் முறையாக நடந்து வர அவர்கள் உதவுகின்ருர்கள்.

நாம் அடைந்துள்ள மானுடப் பிறவியை எப்படிப் பயன்படுத்த வேண்டும் என்பதை நாம் அறிந்திருக்க வேண்டும். ஓரிடத்தில் இடைவிடாது இறைவன் நாமம் உச்சரிக்கப் படுமானல் அந்த இடத்தில் அருள் உண்டா கிறது. சேதனமயமாக இருக்கின்ற மானுட

சரீரத்தில் தெய்விகத் தன்மையைத் தெளிவாக விளக்கத்துக்குக் கொண்டு வரலாம். ஆகவே மானுட ஜன்மம் பெறுதற்கரிய ஜன்மம் ஆகிறது. காக்கை குருவிகள் கொத்திய பழங்கள் கடவுளுக்கு நைவேத்தியமாக வைக்கப் பயன்படா. கடவுளுக்குப் படைக்க வேண்டியவை தூய்மையாக இருக்க வேண்டும். இதைப் பெரியவர்கள் தங்கள் வாழ்க்கையில் காட்டித் தந்திருக்கிறார்கள். ராமகிருஷ்ணருடைய சிஷ்யர்களுள் திரீகுணதீதானந்தர் என்பவர் ஒருவர் ஆவார். சாரதாதேவியார் ஒரு தடவை காரமுள்ள மிளகாய் வாங்கிவரும்படி அவரிடம் கூறினார். அவர் மிளகாய்க்கடை ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு மிளகாயை வாங்கிக் கடித்துப் பார்த்தார். நாம் அப்படிச் செய்திருந்தால் நம் நாக்கு காரத்தால் தெறித்துப் போயிருக்கும். ஆனால் அவர் சிரமப்பட்டு அன்னையார் சொன்ன பிரகாரம் எல்லாக் கடைகளிலும் உள்ள மிளகாயைச் சோதித்துப் பார்த்து அதிகக் காரம் உள்ள மிளகாயை வாங்கிச் சென்றார். இன்னும் ராமகிருஷ்ணரிடம் வந்த மூர்த்திகளுள் நரேந்திரனை ஒரு கோடியிலும், கிரீஷ் சந்திரகோஷை மற்றொரு கோடியிலும் வைக்கலாம். நரேந்திரனைப் பார்ப்பது பரமஹம்சருக்குச் சிவதரிசனத்துக்கு நிகராக இருந்தது. லௌகிகம் நிறைந்த கல்கத்தாவில் இத்தகைய சித்தபுருஷனும் தோன்ற முடியுமா என்று வியப்படைகின்றார். கிரீஷ்சந்திரர் சொன்ன சொல் தவறாதவர் என்று அவரை மிகவும் பாராட்டுகின்றார். ஆனால் அல்லும் பகலும் ராமகிருஷ்ணருக்குப் பணிவிடை செய்து வந்த ஹிருதயர் வாழ்க்கை மங்களமாக முடியவில்லை. தெய்விக இயல்புக்கும் மக்கள் இயல்புக்கும் அடிப்படையான வேற்றுமை உண்டு. ஒரு மனிதனிடம் தொண்ணூற்றொன்பது பங்கு நலன்களும் ஒரு பங்கு கேடும் இருந்தால், சாதாரண மக்களுக்கு அந்தக் கேடுதான் தென்படும். ஒரு மனிதனிடம் தொண்ணூற்றொன்பது பங்கு கேடுகளும், ஒரு பங்கு நலனும் இருந்தால் தெய்விக சம்பத்து ஓங்கப் பெற்ற மனிதனுக்கு அந்த நலன்தான் தென்படும். உலகத்தில் நலனையே கண்ட யுதிஷ்டிரனும், கேட்டையே கண்ட துரியோதனனும் இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டு ஆகின்றார்கள். கிரீஷ்சந்திரரிடம் கேடுகள் நிறைய இருந்தன. அக்கேடுகளுக்கிடையில் சொன்ன சொல் தவறாதவராக இருந்தார். அவரிடமிருந்த அந்த ஒரு நலத்தை வைத்து ராமகிருஷ்ணர் அவரை ஓர் உயர்ந்த மனிதராக்கினார். "உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்" என்று வள்ளலார் கூறுகின்றார். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாத பண்பாளராகக் கிரீஷ் சந்திரர் இருந்ததால் அவரை ஸ்ரீராமகிருஷ்ணர் ஆட்கொண்டார். அவரிடமிருந்த கேடுகளுக்கிடையில் உள்ளதை உள்ளபடி பேசும் உயர் பண்பு அவரை உயர்ந்த நிலைக்குக் கொண்டு வந்தது.

நாம் எந்தத் தெய்வத்தை உபாசனை செய்கின்றோமோ, அந்தத் தெய்வத்தின் விபூதிகள் எல்லாம் நமக்கு வருகின்றன. நரேந்திரன் ராமரை உபாசனை செய்தார். ராமருடைய பண்புகளெல்லாம் அவருக்கும் வந்து அமைந்தன. ராமருக்கு வந்தது போன்று அவருக்கும் வாழ்க்கையில் கஷ்டம் வந்தது. இராமருக்குத் திடீரென்று காட்டுக்குப் போகும்நிலை ஏற்பட்டது. அதே போன்று நரேந்திரருக்கும் திடீரென்று வறுமைநிலை வந்தது. தந்தையார் உள்ள வரையிலும் குடும்பம் ராஜபோகத்தில் இருந்தது. தந்தை திடீரென்று காலமாகி விட்டார். உடனே நரேந்திரருடைய குடும்பம் தரித்திர நிலையை அடைந்தது. குடும்பத்தவர்கள் சிலவேளை பட்டினி கிடக்கவேண்டிய நிலை ஏற்பட்டது. குடும்ப வறுமையைப் போக்குவதற்காக ஓர் உயர்நிலைப்பள்ளியில் தலைமையாசிரியராக எட்டுநாட்கள் நரேந்திரர் வேலை பார்த்தார். தலைமையாசிரியர் பதவியில் இருந்தபொழுது ஸ்ரீ ராமகிருஷ்ணரைப் பார்க்கச் சென்றார். நரேந்திரர் வந்ததும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் அவரைப் பாடச் சொல்லுவது வழக்கம். நரேந்திரர் பாடுவதைக்கேட்டால் ஸ்ரீ ராமகிருஷ்ணருக்குச் சமாதிநிலை வந்துவிடும். ஆனால் இந்த முறை ஸ்ரீ ராமகிருஷ்ணர் நரேந்திரரைப் பாடச் சொல்லவில்லை. நரேந்திரர் தாமாகவே பாடஆரம்பித்தார். இம்முறை அவர் பாட்டைக் கேட்டதும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்ததாவது: "உம்முடைய பாட்டை நிறுத்தும். உம் பாடலைக் கேட்பதற்கு அருவருப்பாக

இருக்கிறது. நீர் சம்பளத்துக்கு வேலை பார்ப்பதால் உம்முடைய மகிமை போய்விட்டது". இங்ஙனம் சம்பளத்துக்கு அடிமை வேலை பார்ப்பவர்களை ஸ்ரீ ராமகிருஷ்ணர் கண்டித்து வந்தார். உலகத்துக்கு அடிமையாக இருக்கும் பொழுது தெய்வீக மகிமை குன்றிப் போகிறது என்பதை ஸ்ரீ ராமகிருஷ்ணர் கண்டார்.

ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய சிஷ்யர்களுள் ஸ்ரீமத் பிரமானந்த சுவாமிகள் ஒருவராவார். ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய ஞானக் குழந்தையாக ஸ்ரீமத் பிரமானந்த சுவாமிகளைச் சொல்வார்கள். பிரமானந்த சுவாமிகள் தெய்விகப் பெற்றியில் ஊறியிருந்தார். ராமகிருஷ்ணர் தம்மீது வைத்துள்ள அன்பில் பங்கு போடுவதற்கு நரேந்திரர் வந்துவிட்டார் என்று ஸ்ரீ பிரமானந்த சுவாமிகள் எண்ணினர். ஆகையால் பிரமானந்தசுவாமிகளுக்கு நரேந்திரரிடம் சிறிது பொறாமை ஏற்பட்டது. ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு அது தெரிய வந்தது. ராமகிருஷ்ணர் பிரமானந்த சுவாமிகளைப்பார்த்து "நீ நரேந்திரன்மீது பொறாமைப் படுகின்றாயா?" என்று கேட்டார். பிரமானந்த சுவாமிகள் "ஆம், அவர் மீது எனக்குப் பொறாமை இருக்கிறது. நீங்கள் அவரைப் பாராட்டும் பொழுதெல்லாம் நான் இரண்டாம் தரமானவனைப் போய்விடுவேன் என்ற எண்ணம் என் உள்ளத்தில் எழுகிறது. ஆகையால் நான் அவர் மீது பொறாமைப் படுகின்றேன்" என்றார். "சான்றோர் ஒருவரைக் குறித்துப் பொறாமைப் பட்டால் உன்னிடமுள்ள சிறப்புக்கள் எல்லாம் போய்விடும். நீ நரேந்திரனைக் குறித்துப் பொறாமைப்படலாகாது. ஆனல் உன்னுடைய உள்ளத்தில் எப்படியோ பொறாமை வந்துவிட்டது. அதற்குப் பிராயச்சித்தம் தேடியாக வேண்டும். நீ இப்பொழுதே புறப்பட்டுப் பிருந்தாவனத்திற்குச் செல். பிருந்தாவனக் கண்ணனிடம் கண்ணீரும் கம்பலையுமாக அழுது உன் உள்ளத்தில் உள்ள பொறாமை போகும்படி பிரார்த்தனைசெய். உன் உள்ளம் ஒழுங்கான பிறகு நீ இங்கு புறப்பட்டு வரலாம்'' என்றார் ஸ்ரீ ராமகிருஷ்ணர். பிரமானந்தசுவாமிகளும் அங்ஙனமே செய்தார்.

பூரணன் என்று பெயர்படைத்த இளைஞன் ஒருவன் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் வந்துபோய்க் கொண்டிருந்தான். அவனிடத்தில் நல்லியல்புகள் இருப்பதை ஸ்ரீ ராமகிருஷ்ணர் பார்த்தார். தரத்தில் நரேந்திரர், பிரமானந்தர் கூட்டத்தில் அவனைச் சேர்க்கலாமென்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் கருதினர். கொஞ்ச நாட்களுக்குப் பிறகு அவன் ஓர் இடத்தில் சம்பளத்திற்கு வேலைக்கு அமர்ந்தான். வேலைக்குச் சேர்ந்த பிறகு ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் அவன் வந்தான். "உன்முகத்தில் இருள் படிந்திருப்பதைக் காண்கின்றேன். நீ யாரிடத்திலாவது சம்பளத்திற்குச் சேர்ந்திருக்கின்றாயா?" என்று கேட்டார். அதற்கு அவன் "ஆம் என் தாயைக்காப்பாற்றும் பொருட்டு ஓர் இடத்தில் நான்சம்பளத்திற்கு வேலையில் அமர்ந்திருக்கின்றேன்" என்றான். "உன் தாயை முன்னிட்டு நீ வேலையில் அமர்ந்திருப்பதை நான் அரை மனதாக ஆமோதிக்கின்றேன். உன் தாய்க்காக இல்லாது நீ இந்த வேலையில் அமர்ந்திருந்தால் உன்னை நான் பாராட்டி இருக்கமாட்டேன். நீ அப்படி அமர்வதற்குப் பதிலாக மாண்டுபோய் இருந்தால் மகிழ்ச்சியடைவேன்" என்று பூரணன் விஷயத்தில் இராமகிருஷ்ணர் பகர்ந்தார். அதன் பின் பூரணன் வாழ்க்கையில் மேல் நிலைக்கு வரமுடியவில்லை. உலக மக்கள் அடிமைத் தொழில்கள் செய்யலாம். ஆனல் பாரமார்த்திகத்திற்கு என்றே தங்களை ஆயத்தப்படுத்துகிறவர்கள் அடிமைத் தொழிலுக்குச் செல்லக்கூடாது.

சரீரம் மேல் நிலைக்குப் போவதற்கு ஏற்ப உணவும் மாறி அமைந்துகொண்டு வருகிறது. ஆத்மசாதனை செய்கின்றவன், சாதனத்தில் மேலே வர வர உணவும் மாறி அமைந்தாக வேண்டும். உணவு விஷயத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் என்ன முறையைக் கையாண்டார் என்பதை அவர் தம் வாழ்வில் காட்டித் தந்திருக்கின்றார். ஸ்ரீ ராமகிருஷ்ணரைப் பார்ப்பதற்குப் பல அன்பர்கள் வருவார்கள். அவர்களுள் செல்வந்தர்களும் இருப்பார்கள். அவர்கள் நல்ல பக்ஷணங்கள் செய்துகொண்டு வருவார்கள். அப்படி ராமகிருஷ்ணருக்குப் பக்ஷணங்கள் கொண்டுபோவதன்மூலம் தங்களுக்கு வியாபாரம் பெருகும் என்ற நோக்கத்தோடு கொண்டு வருவார்கள். இன்னும் சிலர் உத்தியோகத்தில் மேலே போகவேண்டும் என்ற நோக்கத்தோடு பட்சணங்கள் கொண்டு வருவார்கள். அத்தகைய நோக்கங்களோடு கொண்டுவரு

கின்றவர்களுடைய பக்ஷணங்களை எல்லாம் அறையில் மூலை ஒன்றில் வைக்கும்படி ராமகிருஷ்ணர் சொல்லிவிடுவார். அப்பக்ஷணங்களைத் தாமும் தொடமாட்டார், தம் சிஷ்யர்களையும் தொட அனுமதிக்க மாட்டார். ஆனால் விவேகானந்தர் மட்டும் விரும்பினால் அவற்றைச் சாப்பிடலாம் என்று அனுமதி கொடுத்திருந்தார். விவேகானந்தர் தூய்மையில் காட்டுத் தீ போன்றவர் ஆவார். காட்டுத்தீயில் வாழை மரங்கள் எல்லாம் பஸ்பமாவது போன்று விவேகானந்தரிடம் எத்தகைய தீமையும் பஸ்பமாகிவிடுமென்று இராமகிருஷ்ணர் பகர்வார். ஆகையால் அப்பக்ஷணங்களை உண்பதற்கு விவேகானந்தருக்கு மட்டும் விதிவிலக்குத் தந்திருந்தார்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் அறையில் இல்லாத பொழுது நல்ல பக்ஷணமொன்று ஆங்கு இருந்தது. ஸ்ரீமத் பிரமானந்த சுவாமிகள் சற்று ஆவலோடு அப் பக்ஷணத்தைப் பார்த்தார். ஆங்கிருந்த மற்றவர்கள் பிரமானந்தரை அதைச் சாப்பிடும்படி தூண்டினார்கள். சுவாமி பிரமானந்தரும் சிறிது அதை எடுத்து அருந்தினர். ஸ்ரீ ராமகிருஷ்ணர் அறைக்குள் வந்ததும் ஸ்ரீ பிரமானந்தருடைய முகத்தைப் பார்த்தார். அவருடைய முகத்தில் இருள் படர்ந்திருப்பதைக் கண்டார். அறையில் உள்ள பக்ஷணத்தில் ஏதாவது நீ அருந்தினையா? என்று பிரமானந்த சுவாமிகளைக் கேட்டார். "ஆம் சிறிது அருந்தினேன்" என்று பிரமானந்த சுவாமிகள் பதில் அளித்தார். "அதை நீ சிறிது அருந்தியதன் விளைவாக உன் முகத்தில் இருள்படர்ந்து இருக்கிறது. அதன் விளைவாக ஏற்பட்ட மன அழுக்கைப் போக்குவதற்கு நீ இன்று முழுவதும் பட்டினி இருந்து கங்கையில் ஸ்நானம் செய்து ஜபம் செய்" என்று பிரமானந்த சுவாமிகளுக்கு உத்தரவு போட்டார். பிரமானந்த சுவாமிகளுக்கு அத்தகைய நிபந்தனை போட்டதன் விளைவாக சாதனையில் மேலே வருகின்றவர்கள் சரீரத்தை எத்தகைய புனித நிலையில் வைத்திருக்க வேண்டுமென்பதை ஸ்ரீ ராமகிருஷ்ணர் காட்டித் தருகின்றார். சக்திமயமாக இருக்கிற சரீரம் எவ்வளவு புனித நிலையில் பாதுகாக்கப்படுகிறதோ அதற்கு ஏற்ப சரீரத்தில் சிவ சாந்நித்தியம் சிறப்பாக ஒளிர்கிறது. பரமாச்சாரியர் நிலையில் இருப்பவர்கள் மனதையும் உடலையும் என்னபாங்கில் பாதுகாத்து வைத்திருக்க வேண்டும் என்பதை ஸ்ரீ ராமகிருஷ்ணர் விளக்கி இருக்கிறார்.

அம்பிகைக்குத் திரிபுரசுந்தரி என்ற நாமம் உண்டு. அம்பிகையினுடைய அழகு அகிலாண்டத்திலும் பொலிந்துகொண்டிருக்கிறது. அருள் துறையில் வருகின்ற அழகு அலாதியானது. நரேந்திரர், பிரமானந்த சுவாமிகளிடம் அருள் துறையில் அமைந்திருந்த அழகைப் பரமஹம்சர் பக்குவப்படுத்துகின்றார். நரேந்திரரைத் தனியாக அழைத்து ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்ந்ததாவது: "என் சரீரத்தில் இலங்குவது சக்தி. உன் சரீரத்தில் இலங்குவது சிவம்." இங்ஙனம் நரேந்திரர் இடத்தில் சிவத்தன்மை மிளிர்வதை ஸ்ரீ ராமகிருஷ்ணர் பாராட்டியுள்ளார். உயிர்கள் இருக்கின்ற நிலையில் இருந்து மேல் நிலைக்கு வருவதற்கு அம்பிகை உதவுகின்றாள். உயிர்களைப் பக்குவப் படுத்தி உயர்ந்த நிலைக்குக் கொண்டுவருவது அம்பிகையினுடைய மகிமையாகும். பாலர் வகுப்புப் படிக்கின்றவர்களுக்கு அவர்களுக்கு ஏற்ற பாடத்தையும் ஆராய்ச்சித் துறையில் ஈடுபட்டு இருப்பவர்களுக்கு அவர்களுக்கு ஏற்ற பாடத்தையும் புகட்ட வேண்டும். அங்ஙனம் உயிர்களின் பக்குவ நிலையறிந்து அவர்களுக்கு ஏற்ற வழிமுறைகளைப் புகட்டவேண்டும். அம்பிகை ஸ்ரீ மாதாவாக இருந்து உயிர்களைப் பக்குவப்படுத்தி வருகின்றாள். அம்பிகையினுடைய செளந்தர்யம் ஜடநிலையில் ஒரு போக்கில் பொலிகின்றது. சீலத்தில் ஒருபோக்கில் பொலிகின்றது. அருள் துறையில் ஒருபோக்கில் பொலிகின்றது. அப்படிப் பொலிகின்ற மகிமையை அறிந்து அதைப் பாராட்டுவது ஆராதனையாகின்றது. இதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு நம் சொரூபத்தை நாம் புனிதப்படுத்த வேண்டும். உயர்ந்த எண்ணத்தில் மனதை முழ்கடிப்பது நல்ல தியானமாகிறது. உயர்ந்த கருத்தைச் செயலுக்குக் கொண்டுவருவது சக்தி உபாசனை ஆகிறது. சக்தியின் அருளைச் சார்ந்திருந்து, நம்மைப் படிப்படியாக மேல்நிலைக்குக் கொண்டுவர வேண்டும். அம்பிகையின் அருளால் அம்பிகையின் நல்ல செல்வர்கள், செல்விகள் ஆவோமாக.

(முற்றும்)

# மறு பிறப்பு

(சுவாமி விவேகானந்தர் 1895ஆம் ஆண்டு நியூயார்க்கிலுள்ள ஆன்மிக பத்திரிகை ஒன்றுக்கு எழுதிய கட்டுரை)

(142ஆம் பக்கத் தொடர்ச்சி)

சால்டியர்கள் மரணத்துக்குப் பின்பு என்ன நிகழ்கிறதென்பதை எகிப்தியர்கள்போன்று ஆழ்ந்து ஆராய்ச்சி பண்ணினவர்களல்லர். ஆனாலும் அவர்களுக்கிடையில் இவ்வுடலுக்கும், இறந்தபின் உள்ள ஆவிக்கும் தொடர்பு உண்டு என்ற கொள்கை உடையவர்கள் இருக்கின்றனர். உடலுக்குச் சமாதி கட்டுவதிலும், அதைப் பாதுகாப்பதிலும் அவர்களும் ஈடுபட்டனர். இந்தச் சரீரத்தோடு சம்பந்தமில்லாது இருக்க முடியாதென்று அவர்கள் எண்ணினர். இறந்தவர்கள் மீண்டும் உயிர்பெற்று எழுவார்களென்றும் அவர்கள் நம்பினார்கள். அவர்கள் 'இஸ்டார்' என்ற பெண் தெய்வத்தை வழிபட்டு வந்தார்கள். அப்பெண் தெய்வத்துக்குத் துமுழி என்ற கணவன் இருந்தான். ஈயாவும், டாங்கினாவும் அக்கணவனுடைய பெற்றோர்களாவார்கள். அவன் ஓர் இடையனாக இருந்தான். அத்தகையவன் இறந்தபின் 'இஸ்டார்' அவனை உயிர் பெற்று எழச்செய்தார். ஆனால் அதே தெய்வம் சிறந்த பக்தர்கள் ஆலயங்களுக்குச் சென்று தம் நண்பர்கள் பிழைக்கும்படி வேண்டிக் கொண்டதை நிறைவேற்றி வைக்கவில்லை. பழங்கால எகிப்தியர்களும், சால்டியர்களும் செத்தவர்களை உடலிலிருந்தும், சவக்குழியிலிருந்தும் பிரித்துக்காண இயலாதவர்களாக இருந்தார்கள் என்பது நமக்குத் தெரிகிறது. இவ்வுலக வாழ்வு எவ்விதத்திலும் சிறந்த வாழ்வாகிறது. எப்படியும் இதை மீண்டும் பெறுவதற்கே செத்தவர்கள் ஏங்கிக்கொண்டிருக்கிறார்கள். அந்த ஏக்கத்தால் துயரப்பட்டுக் கொண்டிருக்கும் ஆவி உலகத்தினருக்குத் தங்களாலான உதவி செய்து அவர்களுடைய ஆயுளை நீடிக்கச் செய்ய உடல் தாங்கியிருக்கின்றவர்கள் விரும்புகின்றார்கள்.

இத்தகைய கொள்கை நிலவிவரும் நாட்டில் ஆத்மாவைப் பற்றிய உயர்ந்த கருத்து எதுவும் எழுவதற்கு வாய்ப்பு இருக்க முடியாது. இக்கொள்கை முற்றிலும் லௌகிகமானது. அச்சமும் துயரமும் உடையதாக இருக்கிறது. கணக்கற்ற தீயசக்திகள் இக்கொள்கையில் உருவாகின்றன. அச்சக்திகள் நம்மைப் பயமுறுத்த அச்சக்திகளை விலக்குவதற்குப் பெருமுயற்சிகளும் எடுத்துக் கொள்ளப்படுகின்றன. ஆவி உலகத்தினர் அலைவதுபோன்றே இக்கொள்கையை உடைய இவ்வுலகத்தவர்களும் நாடு முழுவதும் அலைகின்றார்கள். இக்கொள்கையுடையவர்களுடைய எண்ணம் சவத்துக்கும், சவக்குழிக்கும் அப்பால் செல்வதில்லை.

ஆத்மாவைப் பற்றிய உயர்ந்த கருத்துக்கள் தோன்றுவதற்குக் காரணமாக இருந்த மக்களைப்பற்றி ஆராய்வோம். அவர்கள் கடவுள் கருணையே வடிவானவரென்றும், எங்கும் நிறைந்தவர் என்றும் கருதினர். அவர் தெய்வீகத்தன்மை பொருந்திய மக்களின் தோற்றத்தில் தம்மைத் தோற்றுவித்துக் கொள்வதாகவும் கருதினர். தெய்வத்தன்மை ஓங்கப்பெற்றவர்க்கு அவர் உதவுவதாகவும் கருதினர். கடவுளைத் தந்தையே! என்று அவர்கள் அழைத்தார்கள். "தந்தை தன் அருமை மகனைக் கையைப் பிடித்துஅழைத்துச் செல்வது போல் இறைவா, எங்களையும் நீ அழைத்துச்செல்" என்று பிரார்த்தித்தார்கள். வாழ்க்கையில் மேலோராவது திண்ணம் என்றும், வாழ்க்கையில் ஏமாற்றத்துக்கிடமில்லையென்றும் நம்பி வந்தனர். அவர்களுடைய மதம் வாழ்க்கையில் துன்பமும், துயரமும் அடைந்து நீண்ட காலத்துக்கு ஒரு முறை வந்து முணுமுணுப்பவருடைய வாயினின்றும் வந்த வார்த்தைகளல்ல. இயற்கையின் இனிமையினின்றும், பேரழகினின்றும் தாமாக எழுந்த கவிதைகளின் கருத்துக்களே அவர்களுடைய மதமாகும். இயற்கையில் சுதந்திரமாகப் பறக்கும் பறவைகளின் ஒலிகளைப் போன்று சுதந்திரமாக எழுந்த பாடல்கள் அவர்களுடைய மதமாகும். எண்பதினாயிரம் ஆண்டுகளுக்குமுன் எழுந்த கருத்துக்கள் இன்றைக்கும் புதியனவாக அமைந்திருக்கின்றன. அத்தகைய கருத்துக்களைக்கொண்ட பழங்கால ஆரிய இனம்தான் ஆத்மாவைப்பற்றி உயர்ந்த கருத்துக்களைக்கொண்டிருக்கிறது.

பழமையான நூலாகிய ருக்வேத சம்ஹிதை

யில் காணப்படும் ஆரியர்களுடைய பிரார்த்தனைகள் வருமாறு: "மரணமில்லாத உலகத்துக்கு என்னை எடுத்துச் செல்லுங்கள்; அழிவற்ற உலகத்துக்கு என்னை எடுத்துச் செல்லுங்கள்; நிரந்தர ஜோதி உலகத்துக்கு என்னை எடுத்துச் செல்லுங்கள்; ஆத்ம ஒளி வீசும் உலகுக்கு என்னை எடுத்துச் செல்லுங்கள். விவஸ்வானுடைய மகன் வாழும் அமர உலகத்தில் என்னை அமரனாக்குங்கள். ஆத்மாவைப்பற்றிய ரகசியம் இருக்கின்ற உலகத்துக்கு என்னை எடுத்துச் செல்லுங்கள். ஒளி நிறைந்த, ஆனந்தம் நிறைந்த உலகில் இருப்பதற்கு என்னை அமரனாக்குங்கள்."

மிலேச்சர்களுடைய கொள்கைகளுக்கும், ஆரியர்களுடைய கொள்கைகளுக்கும் உள்ள வேற்றுமை இவ்வுலகம் போன்று பெரியதாயிருப்பது இப்பொழுது நமக்குத் தெரிகிறது. இவ்வுலகமும், இந்தச்சரீரமும் மிலேச்சர்களுக்கு உண்மையானவை. அவர்களுக்கு வேண்டுபவையெல்லாம். இவ்வுலக இன்பமும், இச்சரீர இன்பமும் தான். உடலை விட்டுப் பிரிகின்ற ஆவி புலனின்பத்தையிழந்து துன்பமும், துயரமும் அடைகிறது என்றும், இச்சரீரத்தைப் பாதுகாத்து வைத்தால் மீண்டும் உயிர் இதில் வந்து புகுந்து கொள்ளுமென்றும் அவர்கள் நம்பினர். ஆகையால் உயிரோடு உள்ள மனிதனைக் காப்பாற்றுவதைவிடப் பிணத்தைக் காப்பாற்றுவதில் அதிகம் கருத்துச் செலுத்தினர். ஆனல் ஆரியர்கள் இச்சரீரத்தை விட்டுச் சென்ற ஆத்மாதான் உண்மையான சொருபமென்று நம்பினர். சரீரத்தை விட்டுப் பிரிந்ததும் சரீரத்தில் இருந்தபொழுது அது அடைந்த ஆனந்தத்தைவிடச் சரீரத்தை விட்ட பிறகு ஆத்மா பேரானந்தத்தில் இருக்கிறது. எனவே சரீரத்தை அழித்து விடுவதில் அவர்கள் துரிதமாக வேலைசெய்தனர். அழுகிப்போகும் இப்பிணத்தை அழித்துத் தள்ளுவதற்கு அவர்கள் அதை நெருப்பில் போட்டுப் பொசுக்கினர்.

ஆரியர்களுடைய கொள்கையிலிருந்துதான் ஆத்மாவைப்பற்றிய உண்மையான கருத்துப் பெற முடிகின்றது. ஆத்மா சரீரமன்று; ஆத்மா உண்மையான சொருபம். உண்மையான மனிதனுக்கும், சரீரத்துக்கும் இடையில் எவ்விதத் தொடர்பும் இல்லை என்ற கருத்திலிருந்துதான் ஆன்மாவின் சுதந்திரம் பற்றிய மேலான கருத்து உதிக்கும். இறந்த பின் ஆவியை மூடியிருக்கும் சரீரத்தையும் கடந்து அப்பால் இருப்பதுதான் ஆத்மாவின் உண்மையான இயல்பு ஆகும். அது வடிவத்தையெல்லாம் கடந்தது. அது தனிப் பொருள். அது ஒப்புயர்வற்றது. ஆத்மா எங்கிருந்து வந்தது என்னும் கேள்வி எழுகின்றது. இக்கேள்வி எழத்தான் செய்யும்.

ஆத்மாவுக்கு அழியாத் தன்மை, தனித்தன்மை இவ்வுடல் எடுப்பதற்கு முன்பே இருந்தன என்னும் கொள்கைகள் முதல் முதலில் இந்தியாவிலுள்ள ஆரியர்களிடமிருந்து தோன்றின. எகிப்தில் சமீபத்தில் ஆத்மாவைப்பற்றிய ஆராய்ச்சி நிகழ்ந்தது. அவ்வாராய்ச்சி ஆன்மா சுதந்திரமானது, இவ்வுலகுக்கு முன்னும் பின்னும் இருப்பது என்னும் உண்மையைக் கண்டுபிடிக்க அவர்களால் முடியவில்லை. எகிப்தியர்களிடத்திலும் ஆத்மாவைப் பற்றிய கருத்து நிலவிவந்தது. அவ் ஆத்மீகக் கருத்து இந்தியாவிலிருந்தே அங்குச் சென்றிருக்க வேண்டுமென்று கண்டு பிடிக்கப்பட்டுள்ளது.

"எகிப்து மத ஆராய்ச்சியில் நாம் ஆழ்ந்து செல்லுகின்றவளவு ஆத்மீகக் கருத்துக்கள் எகிப்தியர்களுக்கு முற்றிலும் அந்நியமானவை என்பது தெளிவாக விளங்குகிறது. ஏதாவது ஆத்மீகக் கருத்து அவர்கள் மதத்தில் இருக்குமாகில் அக்கருத்து ஆஸிரிஸ் என்பவரின் போதனையாக இருக்காது. அக்கருத்து இந்து சமய நூல்கள் மூலமாக அம்மதத்தில் இடம் பெற்றிருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது." இங்ஙனம் ஹாரல்ஹெக்கல் என்பவர் பகர்ந்துள்ளார்.

அலெக்ஸாண்டிரியா நாட்டு யூதர்களிடமும் ஆத்மா தனித் தன்மை உள்ளது என்ற கொள்கை இருந்தது என்பதை நாம் பிற்காலத்தில் அறிகிறோம். இயேசுநாதர் காலத்திலிருந்த பாரசீகர்களும் ஆத்மா பல உடல்களுக்குள் புகுந்து புகுந்து பிரயாணம் செய்து வருகிறது என்பதை நம்பி வந்தார்கள். இயேசுநாதர் முன்பு தோன்றிய தீர்க்கதரிசிகளுடைய மறுபிறப்பு என்பதையும் அவரேதான் எலியாஸ் என்ற தீர்க்கதரிசியாக வந்தார் என்பதையும் அறிகிறோம்." (மத்தேயு XI : *14*) (தொடரும்)

# சுவாமி துரியானந்தர் ஜீவிதம்

( 139 ஆம் பக்கத் தொடர்ச்சி )

## இந்தியா திரும்புதல்

சுவாமி துரியானந்தர் மேல்நாட்டிலிருந்து சுவாமி விவேகானந்தரைப் பார்க்கவேண்டும் என்ற எண்ணத்தில் இந்தியாவுக்கு வந்து கொண்டிருந்தார். சுவாமி துரியானந்தர் ரங்கூனை அடைந்தபொழுது சுவாமி விவேகானந்தர் மகாசமாதி அடைந்துவிட்டார் என்ற செய்தியை அறிந்தார். அச்செய்தி பேர் அதிர்ச்சியை அவருக்குத் தந்தது. விவேகானந்தருடைய மறைவை நினைக்கும்பொழுது வாழ்வு இதுதானு என்ற எண்ணம் சுவாமி துரியானந்தருடைய உள்ளத்தில் ஆழப் பதிந்தது. அதன் பிறகு மூன்று நாட்கள் கழித்து 1902 ஆம் ஆண்டு ஜுலை மாதம் பதினன்காம் தேதி சுவாமி துரியானந்தர் கல்கத்தா போய்ச் சேர்ந்தார். அப்பொழுது விவேகானந்தர் மறைந்து பத்து நாட்கள் பூர்த்தி ஆகி இருந்தன. சுவாமி துரியானந்தரை வரவேற்பதற்காகச் சுவாமி சாரதானந்தரும் மற்றும் பல சந்நியாசிகளும் கல்கத்தா துறைமுகம் வந்திருந்தார்கள். சுவாமி துரியானந்தர் சுவாமி சாரதானந்தரைப் பார்த்ததும் சுவாமி விவேகானந்தருடைய மறைவு அவருக்கு ஞாபகத்திற்கு வந்துவிட்டது. சுவாமி துரியானந்தர் துக்கம் தாங்காமல் சுவாமி சாரதானந்தரை அணைத்துக்கொண்டு புலம்பினர். சுவாமி விவேகானந்தருடைய மறைவு பலநாட்கள் அவர்களுடைய உள்ளத்தை ஒரு கலக்குக் கலக்கிக்கொண்டு இருந்தது. சுவாமி விவேகானந்தர் இல்லாத பேலூர் மடம் உயிரற்றது போல் சுவாமி துரியானந்தருக்குத் தென்பட்டது. சுவாமி விவேகானந்தருடைய வாழ்க்கையில் நிகழ்ந்த பல நிகழ்ச்சிகளை எல்லாம் மடத்தில் உள்ள இளைஞர்களுக்கும், துறவிகளுக்கும் சுவாமி துரியானந்தர் ஞாபகமூட்டிக் கொண்டிருந்தார்.

சின்னுட்கள் பேலூர் மடத்தில் தங்கிய பின் சுவாமி துரியானந்தர் பிருந்தாவனம் சென்ரூர். அவருடன் வசித்திருப்பதற்குப் பிரம்மச்சாரி கிருஷ்ணலால் என்பவர் சென்றிருந்தார். சுவாமி துரியானந்தர் பிருந்தாவனத்தில் மூன்று மாதங்கள் கழித்தார். தீவிரமான தவவாழ்க்கையில் அக்காலத்தில் ஈடுபட்டார். பிரம்மச்சாரி கிருஷ்ணலாலையும் உணவு தயாரிக்க வேண்டாமென்று சொல்லிவிடுவார். தமக்குத் தேவையான உணவைப் பல வீடுகளுக்குச் சென்று பிக்ஷையாகப் பெற்றுக்கொள்ளத் தீர்மானித்தார். சில நாட்களுக்குப் பிறகு தானுக வந்து அமைகின்ற உணவை மட்டும் ஏற்றுக்கொள்ளத் தீர்மானித்தார். சில நாட்களுக்குப் பிறகு சுவாமி பிரம்மானந்தரும் பிருந்தாவனம் வந்து சேர்ந்தார். அவர் சுவாமி துரியானந்தருடன் இரண்டு மாதங்கள் தங்கி இருந்தார். இருவரும் கடும் தபசில் ஈடுபட்டனர். இருவருடைய உள்ளங்களும் குழந்தைகளுடைய உள்ளங்கள் போன்று கள்ளங்கபடமற்ற பாங்கில் அமைந்திருந்தன. பிருந்தாவனத்தில் அவர்கள் இருந்தபொழுது ஹௌராவைச் சேர்ந்த பக்தர் ஒருவர் ஆங்கு வந்திருந்தார். அவர் பதினன்கு வயதுடைய சிறுவராக இருந்தார். அவர் துரியானந்த சுவாமிகளுடன் நெருங்கிப் பழகினர். ஆனல் பிரம்மானந்த சுவாமிகளை அணுக அஞ்சினர். துரியானந்த சுவாமிகள் அவரைப்பார்த்து, “ நீ பிரம்மானந்த சுவாமிகளிடம் சென்று அவருடைய பாதங்களைத் தொட்டு வணங்கு ” என்று கூறினர். அவரும் அவ்வாறு செய்தபொழுது சுவாமி பிரமானந்தருடைய அன்பு உள்ளம் எத்தகையது என்பதை அப்பொழுது தான் அவரால் அறிய முடிந்தது. பிறகு அப் பக்தர் சுவாமி துரியானந்தரிடம் போவதைக் குறைத்துக்கொண்டு சுவாமி பிரமானந்தரிடம் அதிகம் பழகிவந்தார். சுவாமி பிரமானந்தர் துரியானந்த சுவாமிகளைப் பார்த்து, “ உம்முடைய அறவுரையினுல் உமக்குரிய சிஷ்யரை இழந்துவிட்டீர் ” என்று வேடிக்கையாகப் பகர்ந்தார். அதற்குச் சுவாமி துரியானந்தர் “ அவ்விளைஞன் தங்களிடம் வந்ததால் பாக்கியவானுனன்” என்று சிரித்துக்கொண்டே பகர்ந்தார். இங்ஙனம் அவ்விருவரும் சிற்சில சமயங்கள் குழந்தைகள் போன்று ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டனர்.

சுவாமி துரியானந்தர் பிருந்தாவனத்தில் தங்கி இருந்தபொழுது பாகவத வகுப்புநடத்திக்

கொண்டு இருந்தார். 1905 ஆம் ஆண்டு அவர் பிருந்தாவனத்தில் இருந்து இமயமலையில் மாயா வதி என்னுமிடத்தில் உள்ள அத்வைத ஆச்ர மத்திற்குச் சென்றார். அவ்வமயம் சுவாமி சொரு பானந்தர் அவ்வாச்ரமத்தின் பொறுப்பாள ராக இருந்தார். மாயாவதியில் இருந்தபொழுது சுவாமி துரியானந்தர் மடத்தில் உள்ள அன்பர் களுக்கு வகுப்புக்கள் நடத்தினர். சுவாமி விவே கானந்தருடைய பேச்சுக்களையும் கட்டுரைகளை யும் பிரசுரம் செய்வதிலும் ஈடுபட்டிருந்தார். அங்கிருந்து நைனிடாலில் உள்ள அல்மோரா விற்குச் சென்றார். அங்குச் சில நாட்கள் தங்கி விட்டுக் கங்கல் ஆச்ரமம் போய்ச் சேர்ந்தார். கங்கல் ஆச்ரமச் சூழ்நிலை ஆத்ம சாதனைக்கு மிகவும்பொருத்தமானது என்று சுவாமி துரியா னந்தர் கருதினர். எனவே கங்கலில்தங்கி இருப் பதைச் சுவாமி துரியானந்தர் மிகவும் விரும் பினர். கங்கலில் இருந்து ரிஷிகேஷ் சென்றுசில நாட்கள் தங்கி இருந்தார். அங்கிருந்து உத்தர காசி சென்றார். உத்தர காசியில் தங்கி இருந்த பொழுது ஒரு நாளைக்கு ஒரு வேளை உணவு தான் எடுத்துக்கொண்டார். அதிகாலையில் மூன்று மணிக்கு எழுந்திருப்பார். படுக்கையை விட்டு எழுந்ததும் காலைக்கடன்களை முடித்துக் கொண்டு தியானத்தில் அமர்வார். மதியம் பதினொரு மணி அல்லது பன்னிரண்டு மணி வரையிலும் கூட அவர் தியானத்தில் அமர்ந் திருப்பார். உத்தரகாசியில் ஒன்பது மாதங்கள் தவத்தில் ஈடுபட்டிருந்தார். அங்கிருந்து இமய மலையில் உள்ள கேதாரநாத், பத்ரிநாத் ஆகிய ஸ்தலங்களுக்கு யாத்திரை சென்று வந்தார்.

சுவாமி துரியானந்தர் மலைப்பிரதேசங்களில் இயற்கை எழிலில் இருந்துகொண்டு தவம்செய் வதில் நாட்டம் உடையவராக இருந்தார். நதி தீரங்களிலும், மரங்களின் கீழும் குடிசைகள் அமைத்துத் தவம் செய்வதில் அவர் மனம் பெரி தும் விருப்பம் உடையதாக இருந்தது. அம்பி கையின் தோற்றமாக மலை அவருக்குக் காட்சி யளித்தது. புண்ணிய நதிகளையும் அவர் பரா சக்தியின் சொருபமாகவே கருதிவந்தார். அவர் பகர்ந்திருப்பதாவது: "என் குருநாதர் ஸ்ரீ ராம கிருஷ்ணர் அருட்காட்சி பெற்றிருந்தார். அவரு டைய அருட்காட்சியில் கங்கை பிரம்ம சொருப மாகக் காட்சியளித்தது. கங்கையைப் பார்க்கும் பொழுதெல்லாம் அவர் பிரம்மத்தின் தரிசனத் தைப் பெற்றுவந்தார். ஹரித்வாருக்குக் கீழ் அறுபது மைல் தொலைவில் ஒரு சிறு கிராமம் இருந்தது. அது கங்கை நதியின் கரையில் இருந்தது. அக்கிராமத்துக்கு நாகல் என்பது பெயர். அக்கிராமத்தைச் சுற்றிலும் அடர்ந்த காடு இருந்தது. அக்காட்டில் சாதுக்கள் பலர் வசித்து வந்தனர். அவர்கள் ஆழ்ந்து தியானப் பயிற்சி பழகி வந்தனர். கொடிய மிருகங்கள் அக்காட்டில் வாழ்ந்து வந்தன. ஆடு மாடுகளை அவைகள் கொன்று தின்று வந்தன. சுவாமி துரியானந்தர் அக்காட்டில் சில நாட்கள் வசித்து வந்தார். கிராம மக்கள் துரியானந்த சுவாமிகளுக்குக் கொடிய விலங்குகளைப்பற்றி எச்சரிக்கை செய்தனர். ஆற்றின் கரையில் உயரமான இடத்தில் சுவாமிகளுக்கு ஒரு குடி சையும் கட்டித் தந்தார்கள். ஒரு நாள் காலை அக்காட்டில் அவர் ஒரு புலியைச் சந்திக்கும்படி நேரிட்டது. சுவாமிகள் ஒரு பாறையின் மேல் அமர்ந்திருந்தார். அவர் அமர்ந்திருந்த பாறைக் குச் சிறிது தூரத்தில் ஓர் உயரமான இடத்தில் பெரிய புலியொன்று தென்பட்டது. அது சுற்று முற்றும் பார்த்தது. அது நிர்ப்பயமுடையதாக இருந்தது. சுவாமிகள் அசையாது நின்று கொண்டு அதை உற்றுப்பார்த்தார். புலியும் அவரை உற்றுப்பார்த்தது. ஆனல் சிறிது நேரத் திற்குள் உயரமான இடத்திலிருந்து கீழே குதித்து அது ஓடிவிட்டது. நெருக்கடியானநிலை வருகிறபொழுது நாம் நடந்துகொள்வது நமது பண்பை விளக்குகிறது. சுவாமிகள் புலியைப் பார்த்தபொழுது பதட்டமடையாது நடந்து கொண்டது அவருடைய உள்ளத்தின் பண்பை விளக்கிக்காட்டுகின்றது.

சுவாமி துரியானந்தர் வசித்து வந்த குடிலுக் குப் பக்கத்தில் சஹஜானந்த என்னும் சாது ஒருவர் வசித்து வந்தார். அவரைப்பற்றிச் சுவாமி துரியானந்தர் பகர்ந்திருப்பதாவது: "அவர் சாதாரண காவல்பணி புரிந்தவர். தெய்வீக வாழ்க்கையில் பற்று ஏற்பட்டுத் துறவியானர். பிறகு அவர் செய்த அரிய சாதனையின் மூலமாகச் சிறந்த ரிஷியாகிவிட் டார்." சுவாமி துரியானந்தர் வசித்து வந்த இடத்துக்கு ஆற்றின் எதிர்க்கரையில் ஒரு

மைல்தூரத்தில் கிராமம் ஒன்று இருந்தது. அக் கிராமத்துக்குச் சென்று சுவாமி துரியானந்தர் பிக்ஷைவாங்கி வருவார். ஆற்றில் கழுத்தளவு ஜலம் போனாலும் நீந்திக்கடந்து போய்விடு வார். தாம் பிக்ஷையாக எடுத்து வரும் உண வைச் சுவாமி ஸஹஜானந்தாவுக்குப் பங்கு போட்டுக் கொடுப்பார்.

ஒவ்வொருநாள் மாலையிலும் சுவாமிகள் இருந்த குடிசைக்குப் பல சாதுக்கள் வந்து கூடு வார்கள். துளசிதாசர் எழுதிய ராமாயணம் அப்பொழுது படிக்கப்படும். சுவாமிகள் அதற்கு ஹிந்தியில் விளக்கம் தருவார். வடநாட்டு மக் கள் துளசிதாசர் ராமாயணத்தைப் புனித மானது என்று கருதி வந்தார்கள். தெய்வீக அவதாரமாக வந்த ராமனைப்பற்றி ஸ்ரீ துரி யானந்த சுவாமிகள் தந்தவிளக்கம் சாதுக் களுக்கு ராமாயணத்தின் மீதும், சுவாமிகள் மீதும் பக்தியை வளர்த்தது. சுவாமிகளைப் பண்டிட் மஹாத்மா என்றும், வங்காளி சுவாமி என்றும் அவர்கள் அழைத்து வந்தார் கள். அவர் அக்காட்டில் வசித்திருந்தபொழுது எளிய வாழ்க்கை வாழ்ந்து வந்தார். அவர் அணிந்திருந்த சட்டைகளும், வேட்டிகளும் கிழிந்துபோய் விட்டன. அவைகளுக்குப் பதி லாக வேறு உடைகள் அவருக்குக் கிடைக்க வில்லை. எனவே அவர் கௌபீனதாரியாக இருந்து வாழ்க்கை நடாத்தி வந்தார்.

சுவாமிகளுடைய உடல் நாகல் என்னும் கிரா மத்தில் வசித்திருந்தபொழுது மலேரியா ஜுரத் திற்கு உட்பட்டது. உடல் பலஹீனம் அடைய ஆரம்பித்தது. உடல் பலஹீனமானதைப் பற்றியும், நோயைப்பற்றியும் தலைமை மடத்துக் குச் சுவாமிகள் தெரிவிக்கவில்லை. சுவாமிகளைப் பார்க்க வந்த அன்பர்கள் சுவாமிகளினுடைய உடல் நிலையைப்பற்றிக் கங்கல் ராமகிருஷ்ண ஆஸ்ரமத்திலிருந்த சாதுக்களிடம் தெரிவித்தார் கள். அவ்வமயம் கங்கல் ஆஸ்ரமத்தின் பொறுப் பாளராகக் கல்யாணனந்த சுவாமிகள் இருந் தார். அவர்துரியானந்த சுவாமிகளுக்குக் கடிதம் எழுதினர். அக்கடிதத்தில் சுவாமி துரியானந் தரைக் கங்கலுக்குப் புறப்பட்டு வரும்படி எழுதி யிருந்தார். ஆனல் துரியானந்த சுவாமிகள் கங்கலுக்குப் போக மறுத்துவிட்டார். சுவாமி களினுடைய முடிவை அறிந்ததும் கங்காராம் என்னும் பிரம்மசாரியைச் சுவாமிகளுக்கு உதவி யாக நாகலூர்க்கு அனுப்பி வைத்தார்கள். சுவாமி துரியானந்தருடைய உடல் மிகவும் பல ஹீனமடைந்திருந்தது. கால்கள் வீங்கியிருந் தன. நாசியில் ரத்தம் வடிந்துகொண்டிருந்தது. கங்காராம் சுவாமிகளுக்கு நன்கு பணிவிடை செய்தார். நாள் முழுவதும் சுவாமிகளுக்கு உடனிருந்து உதவி செய்வதில் ஈடுபட்டார். சுவாமிகளுக்கு வேண்டிய உணவு தயாரித்துத் தந்தார். இரவு பத்துமணிக்குத்தான் அவருக்குக் கடமை முடியும். இரவு பத்து மணிக்குமேல் அக் காட்டில் சுவாமிகளுடைய குடிலுக்குச் சிறிது தூரத்துக்கப்பாலிருந்த அவர் குடிலுக்குச் செல் வார். "தனியாக இருட்டில் உன் குடிலுக்குப் போகின்ருய். உனக்குப் பயம் இல்லையா?" என்று கங்காராமைக் கேட்டார். "தங்களுக் குப் பணிவிடை பண்ணுகின்றேன். அதன் விளைவாக என் உள்ளத்தில் தைரியம் வந்திருக் கிறது" என்று கங்காராம் பதில் அளித்தார். கங்காராம் தமக்கு வேண்டிய உணவைக் கிரா மத்துக்குச் சென்று பிக்ஷையாகப் பெற்று வந் தார். சில சமயம் சுவாமிகளோடு அவர் சேர்ந்து உண்பார். சுவாமிகளுடைய உடல் நிலையைப்பற்றிப் பேலூர் மடத்துக்குத்தெரிவிக் கலாமா? என்று கங்காராம் சுவாமிகளைக் கேட் டார். அதைக் கேட்டதும் சுவாமிகள் கோப மடைந்தார். "என் உடல் நிலையைப்பற்றிப் பேலூர் மடத்துக்குத் தெரிவிப்பாயானல் நான் இப்பொழுதே இந்த இடத்தைவிட்டுப் போய் விடுவேன்" என்று கூறிப் புறப்படவும் ஆயத்த மானர். கங்காராம் பேலூர் மடத்துக்கு எழுதமாட்டேன் என்ற வாக்குறுதி தந்தபிறகே புறப்படுவதை நிறுத்தினர். சுவாமிகளுடைய பக்தர்கள் அவருக்கு ஒரு நல்ல வீடு கட்டித்தர விருப்பம் தெரிவித்தபொழுது சுவாமிகள் அதற்குச் சிறிதும் இணங்கவில்லை.

சுவாமிகளுடைய முன்னிலையில் யாரையும் குறைகூறக் கூடாது. ஒரு நாள் சமையல்கார பிராம்மணன் ஒருவன் மணம் முடித்துக்கொள் ளப் போவதாகத் தன்னிடம் இருந்த விருப்பத் தைத் தெரிவித்தான். அவன் மிகவும் ஏழ்மை யில் இருந்தான். கல்யாணம் செய்து கொள் வதற்கோ, மணவியைப் பராமரிப்பதற்கோ அவன் இயலாதவனக இருந்தான். அவனு

டைய நிலைமையை அறிந்த கங்காராம் அவன் தீர்மானம் குறித்து நகைத்தார். கங்காராமைப் பார்த்துச் சுவாமிகள் பகர்ந்ததாவது: "நீ ஏன் நகைக்கின்ருய்? உனக்கு மனிதனுடைய மன நிலையைப் பற்றித் தெரியாது. மக்கள் மணம் முடித்துக்கொள்வதில் எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கிருர்கள் என்பது தெரியுமா? அவ்விருப் பம் நிறைவேருவிட்டால் எவ்வளவு துயரத் துக்கு ஆளாவார்கள் என்பது தெரியுமா?" இங் ஙனம் ஒவ்வொருவருடைய மனநிலையையும் அறிந்து அவர்களுடைய மனம் புண்படாதவாறு நடந்துகொள்வார். மற்ருெரு சமயம் சாதுக் களுக்கு ஒரு பெரிய விருந்து நடந்தது. அவ் விருந்துக்குக் கங்காராம் போயிருந்தார். அவ் விருந்துக்கு வந்தவர்களுள் வயதான சாது ஒருவர் இருந்தார். அவர் உண்பதில் மிக விருப்பம் காட்டினர். அதைக் கங்காராம் கவனித்தார். அவருடைய பெருவிருப்பத்தைக் கங்காராம் வேடிக்கையாகக் கூறினர். கங்கா ராமுடைய மனப்பாங்கைத் துரியானந்த சுவாமிகள் மிகவும் கண்டித்தார். கங்காராமி டம் துரியானந்தசுவாமிகள் பகர்ந்ததாவது: "அன்புக்குரிய இளைஞனே! உன்னுடைய வாழ்க்கை என்னும் படகு நட்டாற்றில் நின்று கொண்டிருக்கிறது. அது அக்கரை சேர்ந்தாக வேண்டும். நீ குற்றம்காண விரும்புவாயானல் உன்னுடைய குற்றத்தைப் பார். மற்றவருடைய குற்றத்தை நீ காண்கின்றபொழுது உன் குற்றத்தையே வெளிப்படுத்துபவனுகின்ருய். அது உன் முன்னேற்றத்துக்குத் தடையாகும்." இங்ஙனம் கூறிக் கங்காராம் மனப்பான்மை யைத் திருத்தியமைத்தார்.

சுவாமி துரியானந்தர் உடல்நிலை அபிவிருத்தி யடையவில்லை. கிராமமக்கள் சுவாமி துரியானந் தரைப் பார்க்க வந்திருந்தார்கள். அவர்கள் தங்கள் கிராமத்துக்கு வந்து தங்களுடன் வசித்திருக்க வேண்டுமென்று சுவாமிகளைக் கேட்டுக்கொண்டார்கள். அவருடையஉடலுக்கு வைத்தியம் செய்வதற்கும், நல்ல உணவு கொடுப்பதற்கும் அவர் தங்களிடம் தங்கியிருப் பது வசதியாக இருக்கும் என்று பகர்ந்தார் கள். ஆனல் சுவாமி துரியானந்தர் அவர்களு டைய வேண்டுகோளை ஏற்றுக்கொள்ளவில்லை. கிராமமக்கள் சென்ற பிறகு கங்காராம் "அக் கிராம மக்களுடைய வேண்டுகோளை நீங்கள் ஏன் மறுத்துவிட்டீர்கள்?" என்று கேட்டார். "அவர்களுடன் சென்ருல் என்னுடைய சுதந் திரத்தை நான் இழக்க நேரிடும். சூழ்நிலை யில் நான் அகப்பட்டுக் கொண்டவனுகிவிடு வேன். சூழ்நிலை எவ்வளவு சக்தி வாய்ந்தது என்பதை நீ அறியமாட்டாய். அது எம்மனி தனையும் மயக்கிவிடும்" என்று சுவாமிகள் பகர்ந்தார். "உங்களுடைய உடல்நிலைக்கு வைத்திய உதவி தேவைப்படுகிறது. நீங்கள் காட்டிலேயே இருந்தால் நோய்க்கு வேண்டிய மருந்து எங்கிருந்து அகப்படும்?" என்று கங்கா ராம் கேட்டார். கனத்த குரலில் சுவாமி துரியானந்தர் பகர்ந்ததாவது: "கங்கா தீர்த்தம் சிறந்த மருந்தாகும். ஸ்ரீமந் நாராயணன் சிறந்த வைத்தியராவார்."

சுவாமிகளுடைய துறவும் தியாகமும் ஒப் புயர்வற்றவைகளாக இருந்தன. ஒரு நாள் அவர் கங்காராமிடம் பகர்ந்ததாவது: "குரு தாஸ் என்பவர் ராமகிருஷ்ண சங்கத்தில் சேர்ந்தபொழுது அவருடைய தாயார் அவருக் குக் கொஞ்சம் பணம் தந்திருந்தார். அவர் அப்பணத்தை என்னிடம் ஒப்படைத்தார். நான் அப்பணத்தைச் சிறிதும் பயன்படுத்திக் கொள்ளவில்லை. அவர் அதை அறிந்ததும் எனக்கு ஒரு கடிதம் எழுதினர். நான் தந்த பணத்தை உபயோகப்படுத்தாவிட்டாலும் அதற்குரிய வட்டியையாவது நீங்கள் பயன்படுத் துங்கள் என்று எழுதியிருந்தார். நான் அத் தொகைக்குரிய வட்டியை வாங்கி காசியிலுள்ள சேவாசிரமத்துக்கும் அத்வைதாஸ்ரமத்துக்கும் பயன்படுத்தினேன்." கங்காராம்: "அப்பணம் உங்களுடைய சொந்த உபயோகத்துக்காகக் கொடுக்கப்பட்டது. ஏன் நீங்கள் அதை மடத் துக் காரியத்துக்குப் பயன்படுத்துகிறீர்கள்? அந்த அசலையாவது உங்கள் சொந்த உப யோகத்துக்குப் பயன்படுத்துங்கள்." சுவாமி துரியானந்தர் பகர்ந்ததாவது: "குருதாஸ் இந்தியா மீது பேரன்புகொண்டவர். அவர் இந்தியாவில் வாழ்ந்திருக்க விரும்புகிருர். அவர் மேனுட்டவராவார். அவருக்குப் பிரத்தி யேக உணவும் சில வசதிகளும் இந்தியாவில் வசித்திருக்கத் தேவைப்படுகின்றன. அப் பொழுதுதான் அவர் உடலை ஆரோக்கிய நிலை

யில் வைத்திருக்க முடியும். எனவே அப்பணம் அவருக்குத் தேவைப்படும் என்று நான் அதைப் பத்திரமாக வைத்திருக்கின்றேன்."

இங்ஙனம் சுவாமிகள் யாருடைய பொருளி லும் ஆசை வைக்காது தியாக உள்ளம் படைத் தவராக இருந்தார். துரியானந்த சுவாமிகளு டைய உடல் நிலை நாளுக்கு நாள் பலஹீன மடைந்து கொண்டே வந்தது. இவ்விஷயம் பக்தர்கள் மூலமாகக் கங்கலிலிருந்த கல்யாணு னந்த சுவாமிகளுக்குத் தெரியவந்தது. கல்யாணு னந்த சுவாமிகள் உடனே நாகல் சென்று துரி யானந்த சுவாமிகளைக் கங்கலுக்கு அழைத்து வந்தார். கங்கலில் வைத்தியத்துக்கு வேண்டிய ஏற்பாடும் செய்தார்.

குருதாஸ் என்பவர் இந்தியாவுக்கு வந்து காசியில் தங்கியிருந்தார். அவர் துரியானந்த சுவாமிகளின் உடல் நிலையைக் கேள்விப்பட்டு அவரைப்பார்க்க கங்கலுக்கு வந்தார். அவரு டன் சுவாமி பிரேமானந்தரும் வந்தார். சுவாமி துரியானந்தரும் குருதாஸும் ஒருவருக்கொரு வர் உடல் நிலையைப்பற்றி விசாரித்துக்கொண் டனர். "அம்பிகையின் திருவருளால் யாவும் நிகழ்கின்றன. அம்பிகையின் கையில் நாம் கருவிகளாக இருக்கின்றோம். அம்பிகையின் இச்சைப்படிதான் யாவும் நடக்கின்றன. அவள் அனுமதித்தால்தான் நாம் எதையும் செய்ய முடியும். நாம் இவ்வுண்மையை மறந்துவிடக் கூடாது" என்று சுவாமி துரியானந்தர் பகர்ந் தார். "நம்மை ஏன் அம்பிகை பலஹீனமாக ஆக்கியிருக்கின்றாள் ?" என்று குருதாஸர் கேட் டார். "அது அம்பிகைக்குத்தான் தெரியும். எல்லாவற்றிலும் நன்மை இருக்கிறது. ஏன் அம்பிகை அங்ஙனம் செய்திருக்கிறாள் என்று நாம் தீர்மானிக்க முடியாது" என்று சுவாமி துரியானந்தர் பகர்ந்தார். மேலும் சுவாமி துரி யானந்தர் பகர்ந்ததாவது: "அம்பிகையினு டைய திருவருளால் நான் மேல் நாட்டிற்கு வந் திருந்தேன். நீங்கள் எல்லாரும் எனக்கு அன் பர்களானீர்கள். உங்களைப் பார்ப்பதில் நான் மகிழ்ச்சி அடைகிறேன். நீங்கள் என்றும், நான் என்றும் வேறுபாட்டை உண்டுபண்ணு வது மனமே ஆகும். ஆத்மாவில் உங்களுக்கும் எனக்கும் எவ்வித வேறுபாடும் இல்லை. மன தின் தோற்றமே இவ்வுலகம். நலம் பொலம் நம் மனதில்தான் இருக்கின்றன. எங்கும் நல லைக் காண்பது தான் நல்லது. அம்பிகையின் அருள் இருக்கும்பொழுது எல்லாம் நலமாக முடி கின்றன. அம்பிகையின் அருள் வாய்க்காத விடத்துக் கஷ்டங்கள் வருகின்றன. எல்லாம் அம்பிகையினுடைய திட்டப்படி நிகழ்கின்றன. அம்பிகையை நாம் முற்றிலும் சார்ந்திருக்க வேண்டும். நமக்கு முக்கியத்துவம் கொடுத்து நாம் திட்டம் போடுவது நற்பலனை அளிக்காது. என்ன நிகழவேண்டும் என்பதை அன்னை முன்பே திட்டம் போட்டிருக்கின்றாள். நாம் திட்டம் போடுவது அம்பிகையினுடைய திட் டத்தில் நம்பிக்கை இல்லாதது ஆகும். சாதுக் களுடைய சகவாசத்தில் நான் இருக்க விரும்பு கின்றேன். பரத்தைப்பற்றியே பேசுகின்றவர் களோடு நான் இருக்க விரும்புகின்றேன். நான் எனக்குத் தெரிந்ததை உபதேசிக்கின்றேன். மற்றவர்களுக்குச் சேவை செய்வதைவிட மகிழ்ச்சியைத் தருவது வேறு என்ன இருக் கிறது ? நான் அமெரிக்காவில் இருந்தபொழுது மிக்க மகிழ்ச்சியுடையவனாக இருந்தேன். அம்பிகையின் அருளால் வரும் செயலை ஏற்றுக்கொள்கின்றேன். அவள் இச்சைப்படி வருவதை நான் மகிழ்ச்சியுடன் செய்கின்றேன். சரீரத்தை மறந்திருந்த காலம் எல்லாம் உண வைப்பற்றிய பிரச்னையே இல்லை. ஒரு வேளை உணவோடு பல நாட்கள் கழிந்திருக் கின்றன. ஆனால் உடலும் மனமும் அப் பொழுது திட்பமுடையனவாக இருந்தன. சரீரத்தைப்பற்றிய நினைவு வரும்பொழுது உணவைப் பற்றியும் கருத்துச் செலுத்த வேண்டி வருகிறது. சத்துள்ள உணவை ஏற்று உடலைப் பராமரித்து வரவேண்டும். மனம் சரீரஉணர்வைக் கடந்து செல்லும்போது உணவை ஏற்காமலேயே உடல் திடகாத்திர மாக இருக்கிறது. உள்ளத்துக்கு உயர்ந்த விஷயங்களை உணவாகக் கொடுக்கவேண்டும். உயர்ந்த விஷயங்கள் யாவும் ஒரே லட்சியத்தின் கண் எடுத்துச் செல்கின்றன. வாழ்க்கையில் லட்சியம் ஒன்று இருக்க வேண்டும். அந்த லட் சியத்திற்காக வாழவேண்டும். அந்த லட்சியத் தைக் குறித்தே தியானம் செய்யவேண்டும். அந்த லட்சியத்தைக் குறித்தே அல்லும் பகலும் சிந்தனை செய்து வரவேண்டும்." (தொடரும்)

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம்-129

**740. लज्जा லஜ்ஜா**—நாணமே வடிவெடுத்து இருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

முன்னிடு ஏதுமில்லாது சங்கோஜம் அல்லது பின்னணியில் இருப்பதே பெண்பாலர்க்குரிய பண்பாடுகளில் ஒன்றாகும். அம்பிகை தானே அந்தப் பண்பை விளக்கிக்கொண்டிருக்கிருள். 'யாதேவி சர்வபூதேஷு லஜ்ஜா ரூபேண ஸம்ஸ்திதா நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோநம:' என்னும் போற்றுதல் தேவி மகாத்மியத்தில் வந்துள்ளது. சிறு சிறு செயல்களில் முன்னிடு படைத்திருப்பது பண்பு இன்மைக்கு அறிகுறியாகும். ஆழ்கடல் அமைதியே வடிவெடுத்து இருக்கிறது. ஆனால் அதன் மேல்பரப்போ அலைவடிவெடுத்துச் சுருண்டோடிக்கொண்டிருக்கிறது. நிலையின்மைக்கு அறிகுறி அலைவீசுதல். யாண்டும் நிலைத்திருப்பதற்கு அறிகுறி கடலின் ஆழ்ந்த பகுதியாகும். அண்டகோடிகளனைத்துக்கும் மூலகாரணமாயிருக்கும் மூலப்ரகிருதித்தாய் யாண்டும் அடக்கத்துடனும் நாணத்துடனும் தன்னைப் பின்னணியில் வைப்பது அவளுடைய பேராற்றலுக்கு அறிகுறியாகும். அன்னை பராசக்தியை உபாசிப்பவர்கள் எந்த விதத்திலும் தங்களை விளம்பரப்படுத்திக் கொள்ளலாகாது. அன்னவர்களை மேன்மைப்படுத்துகிற பாங்கில் மற்றவர்கள் அவர்களை விளம்பரப்படுத்தினால் அதைக் குறித்து அவர்கள் மகிழ்வுறலாகாது. அத்தகைய சந்தர்ப்பத்தில் லஜ்ஜை அல்லது நாணமே வடிவெடுத்தவர்களாக அவர்கள் இலங்கவேண்டும். அத்தகைய மனப்பான்மை படைத்தவர்களே அன்னையின் ஆராதனைக்குத் தகுதிவாய்ந்தவர்கள் ஆகிறார்கள்.

**741. रम्भादिवन्दिता ரம்பாதி வந்திதா**—ரம்பை முதலிய அப்ஸர மாதுக்களால் வணங்கப்படுகிறவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

ரம்பை, ஊர்வசி, மேனகை முதலானவர்கள் விண்ணுலகத்து பெண்பாலர்கள் ஆவார்கள். விண்ணவர்களுக்கு எங்ஙனம் மூப்பு இல்லையோ அங்ஙனம் விண்ணவர்களை மகிழ்விப்பவர்களாகிய இத்தகைய பெண்பாலர்களுக்கும் மூப்பு இல்லை. இவர்கள் ஆடல், பாடல்களில் திறமை வாய்ந்தவர்கள். யாண்டும் இன்புற்றிருப்பதற்கு ஏற்ற இடம் சொர்க்கம். அத்தகைய சுவர்க்க வாழ்க்கையில் ஈடுபட்டிருப்பவர்களுக்குச் சலிப்புத் தட்டாத பாங்கில் மகிழ்வூட்டும் திறமை இவர்களுக்கிருக்கிறது. இயற்கைத் தாயின் ஓர் அம்சத்தின்கண் இத்தகைய மகிமையைக் காணலாம். ஆத்ம சாதனம் புரிகின்ற மேலோர்களிடத்து மனச் சோர்வு உண்டாவதில்லை. சந்ததமும் இளமையோடு இருக்கலாம் என்னும் கோட்பாடு அவர்களுக்குப் பொருந்தியதாகிறது. அதற்கு அடிப்படைக் காரணம் தேகாத்ம புத்தி அல்லது சரீரத்தைத் தான் என்று உணரும் உணர்வைத் தாண்டியிருப்பதே ஆகும். ரம்பை முதலிய தேவலோகக் கன்னியர்களிடத்து இத்தகைய மேலான மனநிலை இருப்பதை ஆத்ம சாதகர்கள் அறிந்திருத்தல் வேண்டும். அப்பொழுது தாங்களும் ஓரளவு தேகாத்ம புத்தியைத் தாண்டிப் பாரமார்த்திகப் பெருநிலையில் இன்புற்றிருக்கலாம் என்னும் கோட்பாட்டை ரம்பையானவள் தான் புரிந்து வருகின்ற அம்பிகையின் வழிபாட்டின் வாயிலாக விளக்குகிருள்.

**742. भवदावसुधावृष्टिः பவதாவசுதாவ்ருஷ்டி:**—பிறவி என்னும் காட்டுத்தீயை அணைப்பதற்கேற்ற அருள் மழையாயிருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

இன்பம், துன்பம் ஆகிய இரண்டும் சேர்ந்து அமைந்திருப்பது பிரபஞ்ச வாழ்வு. இன்பத்தை மட்டுமே நாடி உயிர் வகைகள் பிறவி எடுத்துள்ளன. ஆனால் காலாந்தரத்தில் அவ்வுயிர்களுக்கு இவ்வுலகைப்பற்றிய அனுபவம் ஒன்று உண்டாகிறது. இவ்வுலகம் நல்குகிற ஒவ்வோர் இன்பத்திலும் துன்பமும் சேர்ந்தே அமைந்திருக்கிறது. துன்பம் கலவாத இன்பத்தை நாடுவது உயிர்களின் பாங்கு. அந்த இன்பத்தை அவ்வுயிர்கள் தேடுவது அதற்குப் பொருத்தமற்ற இடமாகிய இவ்வுலகமாம். இதனுள் வந்து துன்பத்துக்கு இலக்கான பின்பே உயிர்வகைகள் இவ்வுண்மையை அறிகின்றன. பின்பு அவைகள் துன்பத்தைத்

தவிர்க்க முயலுகின்றன. உயிர் வகைகளுள் பக்தி வாய்க்கப்பெற்றிருக்கிற மக்கள் துன்பத்தினின்று தங்களை விடுவித்துக்கொள்ள அன்னை பராசக்தியிடம் பரிந்து பிரார்த்திக்கின்றனர். அவள் கிருபைகூர்ந்து அமிர்த மழையைப் பொழிந்து தன்னை ஆராதிக்கின்றவர்களைக் காப்பாற்றுகின்ருள் என்பது இந்த நாமத்தின் கருத்து.

**743. पापारण्यदवानला பாபாரண்யதவானலா** — பாபம் என்னும் அடவிக்குக் காட்டுத் தீயாயிருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

பிரபஞ்ச வாழ்க்கையைப்பற்றிய மற்ருெரு கோட்பாடு இந்த நாமத்தில் அடங்கியிருக்கிறது. புண்ணியமும், பாபமும் இணைபிரியாதவைகள். புண்ணிய கிருத்தியங்கள் எனக் கருதப்பட்டு இவ் வையகத்தில் செய்துவருகிற வினைகளில் துயரமும் அடங்கியிருப்பதால் ஒவ்வொரு புண்ணிய கருமத்திலும் பாபமும் அடங்கப்பெற்றிருக்கிறது என்பது வெளியாகிறது.

சான்ருென்று எடுத்துக்கொள்வோம். வழிபாட்டுக்குரிய இடத்தைக் கூட்டிப் பெருக்கிச் சுத்தமாக்குகின்ருன் சாதகனொருவன். அது புண்ணிய கிருத்தியமாகக் கருதப்படுகிறது. ஆனல் அதே செயலில் ஆங்குள்ள ஜீவ, ஜந்துக்களை அம்மனிதன் துன்புறுத்துகின்ருன். துன்புறுத்துதல் என்னும் பாபச்செயல் அந்தப் புண்ணியச் செயலில் இடம்பெறுகிறது. பிறகு வழிபாட்டுக்காகப் பச்சிலைகளையும், புஷ்பங்களையும் அவன் கொய்கிருன். அதன் விளைவாக ஸ்தாவர உலகுக்கு விளைவிக்கிற துன்பத்தை அவன் அறியமாட்டான். உலகில் இங்ஙனம் எல்லாக் கிருத்தியங்களிலும் நலனும் கேடும் சேர்ந்தே அமைந்திருக்கின்றன. நல்வினையில் ஈடுபடுகிறவன் தீவினையிலும் தன்னை அறியாது ஈடுபட்டவன் ஆகின்ருன். அதன் விளைவாக வருகிற துயரத்தைத் துடைப்பதற்கு அன்னையின் அருள் ஒன்றே உற்ற உபாயமாகிறது. அந்த அருள் ஈண்டுக் காட்டுத் தீயாக இயம்பப்பட்டிருக்கிறது. வனத்திலே பற்றி எரிகிற தீ வனத்துக்குத் தீங்கை விளைவிப்பது போன்று தென்படுகிறது. ஆனல் பழுதுபட்டுப்போன இலை, சருகு முதலியன தீயில் வெந்து சாம்பலான பிறகே அடுத்து வருகிற மழையின் விளைவாகச் செழிப்புற்ற வளர்ச்சி மரம், செடி, கொடிகளுக்கு உண்டாகிறது. அங்ஙனம் காட்டுத் தீ போன்றிருக்கிற அன்னையின் அருள் தவிர்க்க முடியாது வாய்க்கின்ற தீச்செயல்களின் தோஷத்தைத் துடைத்துத் தள்ளுகிறது என்பது இந்த நாமத்தின் உட்பொருள்.

**744. दौर्भाग्यतूलवातूला தௌர்பாக்ய தூலவாதூலா** — தௌர்பாக்யமாயிருக்கிற பஞ்சுப் பொதியைச் சிதறடிக்கும் சூருவளிக் காற்ருக இருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

ஒவ்வொரு சௌபாக்யத்தையும் தொடர்ந்து தௌர்பாக்யம் வருகிறது. அதுவே இவ்வையக வாழ்க்கையைப் பற்றிய விருத்தாந்தமாகும். பிறப்பு என்னும் சௌபாக்கியத்தைத் தொடர்ந்து இறப்பு என்னும் தௌர்பாக்யம் வருகிறது. வாழ்வில் முன்னேற்றம் என்னும் சௌபாக்யத்தைத் தொடர்ந்து க்ஷீணதசை அல்லது பிற்போக்கு என்னும் தௌர்பாக்யம் வருகிறது. நோயற்ற வாழ்வு என்னும் சௌபாக்யத்தைத் தொடர்ந்து நோய்வாய்ப்படுதல் என்னும் தௌர்பாக்கியம் வருகிறது.

யௌவனம், காளைப்பருவம் என்னும் சௌபாக்யத்தைத் தொடர்ந்து முதுமை, மெலிவு என்னும் தௌர்பாக்கியம் வருகிறது. இத்தகைய தௌர்பாக்யங்களெல்லாம் வாழ்க்கையின் பிற்பகுதிகளில் பஞ்சுமூட்டை போன்று குவிந்திருந்து மனிதனுக்கு இன்னலை விளைவிக்கின்றன. அந்த இன்னலை அகற்றுவதற்கு உற்ற உபாயமாயிருப்பது அன்னையின் அருள் என்னும் புயல் காற்ரும். புயல் காற்றிலே அகப்பட்டுக் கொள்கிற பஞ்சானது இருக்குமிடம் தெரியாது அப்புறப்படுத்தப்படுகிறது. அன்னை பராசக்தியின் அருளுக்குப் பாத்திரமாகியவனுக்குத் தௌர்பாக்யமெனும் கேடு இல்லை என்பது இந்த நாமத்தின் பொருள்.

**745. जराध्वान्तरविप्रभा ஜராத்வாந்தரவிப்ரபா**—ஜரை அல்லது முதுமை என்கின்ற இருளை அகற்றுதற்குரிய சூரியப்ரகாசம் என்பது இந்த நாமத்தின் பொருள்.

பிரபஞ்ச வாழ்க்கையில் தவிர்க்க முடியாத தீங்குகள் ஒன்றன் பின் ஒன்ருக ஈண்டு வரு

ணிக்கப்படுகின்றன. இளமைக்கு எதிரிடையா யிருப்பது முதுமை. இளமையில் இவ்வுலக வாழ்வு சுவர்க்க வாழ்வாகக் காட்சி கொடுக் கிறது. சூழ்நிலைகள் யாவும் அனுகூலம் நிறைந் தவைகளாகத் தென்படுகின்றன. ஆதலால் மானுடன் ஆர்வத்தோடு அதனுள் பிரவேசிக் கிறான். வாழ்க்கையின் பிற்பகுதியில் விருத்தாப் பியம் விரைந்து வந்துகொண்டிருக்கிறபொழுது உலகின் காட்சி மனிதனுக்கு விரைவில் மாறி யமைகிறது. அனுகூலமாயிருந்தவைகள் யாவும் இப்பொழுது பிரதிகூலமானவைகளாகப் புலப் படுகின்றன. இன்பத்திற்கேதுவான இக லோக வாழ்வில் துன்பம் புதைந்து கிடக்கிறது. அத்தகைய துன்பத்தைத் துடைப்பதற்கு இவ் வுலகவைபவங்கள் ஒருபொழுதும் உதவ மாட்டா. இளமையில் கை, கால்களை அமுக் கிக் கொடுத்து இன்பமூட்டிய அதே செயல் முதுமையில் துன்பத்தை விளைவிக்கும் பெருங் கேடாகக் காட்சி கொடுக்கிறது. அங்ஙனம் முதுமையில் துன்பத்துக்கே இருப்பிடமாயிருக் கின்ற இகலோக வாழ்வு என்னும் கார் இருளை அறவே அகற்றுவதற்கு உற்ற உபாயமாயிருப் பது அம்பிகையின் அருள் என்னும் சூரியப் பிரபையாம். ஆதலால் யாண்டும் அன்னையின் அருளை நாடியிருக்கும் ஆத்ம சாதகன் இவ் விஷய விபத்துக்களினின்று தன்னை விடுவித் துக்கொள்கிறான்.

**746. भाग्याब्धिचन्द्रिका பாக்யாப்தி சந் திரகா**—பாக்கியம் என்கின்ற சமுத்திரத்தைப் பொங்கச் செய்யும் சந்திர வெளிச்சமாய் இருப் பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

உடைமையும் வறுமையும் ஒருவழி நில்லா என்பது கோட்பாடு. உடைமை என்பது சௌபாக்கியம்; வறுமை என்பது தௌர் பாக்கியம். பிரபஞ்ச வாழ்க்கை முறையில் இவை இரண்டும் மாறிமாறி வந்துகொண்டே இருக்கின்றன.

சமுத்திர நீர்மட்டம் ஒரே அளவில் இருப்ப தில்லை. சந்திரனுடைய உதயத்தை அனுசரித்து நாள்தோறும் அது இரண்டு தடவை மேலே கிளம்புவதும், பிறகு கீழே தணிவதுமாக அமை கிறது. பௌர்ணமியன்றும் அமாவாசை யன்றும் நண்பகலிலும் நடுநிசியிலும் சமுத்தி ரத்தில் நீர்மட்டம் உச்சநிலைக்கு வருகிறது. இது ஆகர்ஷணம் அல்லது ஈர்ப்புச் சக்தியினு டைய விளைவு. பௌர்ணமிக்கு நிகர் சௌபாக் கியம். பௌர்ணமியன்று பகலிலும் இரவிலும் அதிக வெளிச்சம் பூமியில் படிகிறது. அன்னை பராசக்தியின் அனுக்கிரகம் என்னும் சந்திரிகை வாய்க்குங்கால் அன்னையின் குழந்தைகளாகிய ஆத்மசாதகர்களுக்கு நலன்கள் அனைத்தும் நன்கு வந்து வாய்க்கின்றன. தீமைகள் அனைத் தும் அறவே ஒதுக்கப்படுகின்றன.

இயற்கையினுடைய சோபை சந்திர வெளிச் சத்தில் உச்சஸ்தானம் பெறுகிறது. சூரிய வெளிச்சத்துக்கும் சந்திர வெளிச்சத்துக்கும் இடையில் பெரிய வேற்றுமை ஒன்று உண்டு. சூரிய வெளிச்சம் வெப்பத்தோடு கூடியது. வெப்பம் ஓங்குமிடத்து உயிர் வகைகள் திணறு கின்றன. வெப்பம் தாங்கமாட்டாது மடிந்து போகும் உயிர்களும் உள. அது தௌர்பாக்கிய நிலை. ஆனால் சந்திர வெளிச்சமோ தணுப்பும் இனிமையும் வாய்க்கப்பெற்றது. இனிமையில் மிகைபட்டுப் போதல் என்பது இல்லை. இனிமை ஓங்க ஓங்க இன்பம் வளருகிறது. அது பரமா னந்தமாக பரிணமிக்கிறது. அன்னை பராசக்தி யின் திருவருள் நிறை நிலாவின் வெளிச்சத் துக்கு நிகரானது. அதில் ஆக்கமும் ஆனந்த மும் ஒன்று சேர்ந்து மிளிருகின்றன. தெவிட்டிப் போதல் என்னும் குறைநிலைக்கும் அந்த வாய்ப் புக்கும் வெகுதூரம். ஆனந்தம் மேல்நோக்கிப் போய்க்கொண்டே இருக்கிறது. எல்லா உயிர் களும் ஆனந்தத்தை நாடிப் போய்க்கொண்டிருக் கின்றன. ஆனந்தத்தை உலகில் இருந்து பெறு வதற்கு உயிர்கள் முயல்கின்றன. ஆனால் உல கியல் ஆனந்தத்துக்கு துன்பம் என்னும் விலை கொடுத்தாகவேண்டும். அம்பிகையின் அரு ளால் கிடைக்கும் ஆனந்தம் பேரானந்தம் ஆகிறது. அவ்வானந்தத்தில் துன்பத்துக்குச் சிறிதும் இடமில்லை. உலகியல் ஆனந்தத்துக் குத் துன்பம் என்னும் குறை உண்டு. அம்பிகை யின் அருளால் கிடைக்கும் பேரானந்தமும் நிறை இன்பமாகிறது. சிரேயஸ் என்னும் சிறப்பும், மேல்நோக்கிப் போய்க்கொண்டே இருக்கிறது. அன்னையின் அருளுக்கு இலக்காகின்றவர்கள் அடையும் பேறு இதுவாம். பாக்யாப்தி சந் திரிகா என்னும் நாமத்தில் இந்த அரிய கருத்து அடங்கப் பெற்றிருக்கிறது.

# ஸத் ஸம்பாஷணை

**கேள்வி: (199) அவனன்றி ஓர் அணுவும் அசையாது என்பதால் உலகில் நடை பெறும் தீய செயல்களுக்கும் இறைவன் தான் காரணம் அல்லவா ?**

உலகிலே எல்லாவிதமான நிகழ்ச்சிகளும் நடைபெற்று வருகின்றன. அவைகளில் சில நலம் தருவனவாகவும், வேறு சில தீங்கை விளைவிப்பனவாகவும் இருக்கின்றன. அவரவர் செயலுக்கு அவரவரே பொறுப்பாளி என்னும் கோட்பாடு ஒரு பக்கம். உலகெங்கும் உள்ள செயல்களனைத்தும் ஈசனுடைய ஆணையால் நிகழ்கின்றன என்னும் கோட்பாடு மற்றொரு பக்கம். இவை இரண்டுக்குமிடையில் முரண்பாடு இல்லை. உலகெங்குமுள்ள செயல்களனைத்தும் ஈசனுடைய பெருந்திட்டத்தில் அடங்கியிருக்கின்றன. சிருஷ்டியில் நலனும், கேடும் சேர்ந்தே அமைந்திருக்கின்றன. உயிர்களின் முன்னேற்றத்திற்கு நல்ல செயல்கள் ஒரு விதத்தில் உதவுகின்றன. கெட்ட செயல்கள் இன்னொரு விதத்தில் உதவுகின்றன. பாதையில் ஒருவன் நடந்துசெல்லுகிறான். ஏதேதோ பூச்சி புழுக்களைக் காலால் மிதித்துக்கொண்டு போகிறான். அவைகளில் பல மிதியுண்டு சாகின்றன. இன்னும் பல மிதியுண்டு வருந்திக் கிடந்து பிறகு தெளிவடைகின்றன. மற்றும் சில உயிர்கள் மிதியுண்டும் துன்பப்படுவதில்லை. தன் போக்கில் போகிற மனிதன் பாம்பு ஒன்றை மிதித்தான். அது அவனைத் தீண்டியது. விஷம் உடலெங்கும் பரவி அவன் மாண்டு போனான். விஷப் பாம்பைக் கடவுள் ஏன் படைத்தார் ? என்னும் கேள்வி எழுகிறது. மனிதனைக் கடவுள் ஏன் படைத்தார் ? என்னும் கேள்வி எழுவதில்லை. இதற்கு அடிப்படைக்காரணம் மனிதன் தான் இன்புற்று இவ்வுலகில் வாழ்ந்திருக்கவந்தவன் என்னும் கொள்கையில் அவன் ஊறியிருக்கிறான். தான் மற்ற உயிர்களுக்குச் செய்கின்ற தீங்கைப்பற்றி அவன் எண்ணிப்பார்ப்பதில்லை. மற்ற உயிர்கள் தனக்கு ஏன் தீங்கை விளைவித்தன என்னும்கேள்வியை அவன் கிளப்புகிறான். தனக்குத் தீங்கு செய்கிற உயிர்வகைகளைக் கடவுள் படைத்திருக்கலாகாது என்கின்ற முடிவுக்கும் அவன் வருகின்றான். இத்தகைய முடிவுக்கு அடிப்படைக் காரணம் மனிதன் படைத்துள்ள சுயநலப்பற்றும். கடவுளுடைய சிருஷ்டியில் எல்லாவிதமான ஜீவ ஜந்துக்களும் இருக்கின்றன. பரஸ்பரம் உதவி புரிந்து கொள்ளும் ஜந்துக்கள் இருக்கின்றன. பரஸ்பரம் தீங்கை விளைவித்துக்கொள்ளும் ஜந்துக்களும் இருக்கின்றன. ஆதலால் உயிர்வகைகளுக்கு நலன்களும் கேடுகளும் மாறி மாறி வந்து கொண்டேயிருக்கின்றன. சுருங்கச்சொல்லின் நலனும், கேடும் சேர்ந்தே அமையப் பெற்றது இவ்வுலக வாழ்வு. உயிர் வகைகள் நலனை நாடியும், கேட்டைத் தவிர்த்தும் வாழ்ந்து வருகின்றன. இந்த இரண்டு விதமான பயிற்சிகளும் எல்லா உயிர்களுக்கும் தேவையானவைகளாக அமைந்திருக்கின்றன. ஆபத்துக்களிலின்று தங்களைப் பாதுகாத்துக் கொள்ளுதல் உயிர்களனைத்துக்கும் இன்றியமையாத பயிற்சி ஆகிறது. அப்படியிருந்தும் ஆபத்துக்களில் பல உயிர்கள் அகப்பட்டு மடிந்து போகவும் செய்கின்றன. அப்படி மடிந்து போவதும் ஒரு விதப் பயிற்சியாகிறது. அடுத்த பிறவியில் அத்தகைய ஆபத்தினின்று தன்னைப் பாதுகாத்துக்கொள்ள ஒவ்வோர் உயிரும் முயன்று வருகிறது. ஆகவே இறைவனுடைய சிருஷ்டியிலுள்ள நலன்களும் கேடுகளும் ஜீவாத்மாக்களைப் பண்படுத்துதற்கு நல்ல பாங்கில் பயன்பட்டு வருகின்றன. சிருஷ்டியின் அமைப்பு முழுதையும் தொகுத்து ஆராய்ந்து பார்க்கிறவர்களுக்கு உண்மை ஒன்று நன்கு விளங்குகிறது. ஜீவாத்மாக்களைப் பக்குவப்படுத்துவதற்கு நலன் ஒருபாங்கில் பயன்படுகிறது; தீங்கு மற்றொரு பாங்கில் பயன்படுகிறது. இக் கோட்பாட்டின்படி சிருஷ்டியில் என்னென்ன பாங்குகளெல்லாம் இடம் பெற்று இருக்கின்றனவோ அவையாவும் உயிர்களின் முன்னேற்றத்திற்கு இன்றியமையாதவைகளாம். இவை யாவையும் அமைத்து வைத்துள்ள ஈசன் இச்செயல்களுக்கெல்லாம் அப்பாற்பட்டவராக இருக்கிறார். செயல்களில் ஈடுபட்டுள்ள ஜீவர்களோ வாழ்க்கைப் பயிற்சியைப் பெற்று வருகின்றன. ஆதலால் நலன் கேடு ஆகிய

இரண்டும் சேர்ந்து அமைந்துள்ள ஈசனுடைய சிருஷ்டி அற்புதமானதாம்.

**கேள்வி: (200) நன்றி நவிலுதல் மேல்நாட்டிலிருந்து வந்துள்ள நல்ல பழக்கங்களில் ஒன்ருகிறது. நம் நாட்டில் ஏன் இந்த நல்லபழக்கம் தாளுக வடிவெடுக்கவில்லை?**

நன்றி நவிலுதலை ஆங்கிலத்தில் Thank you என்று சொல்லுகிருேம். இதற்கு முற்றிலும் பொருத்தமான மொழி பெயர்ப்பு இந்தியாவிலுள்ள எந்த மொழியிலும் காணமுடியாது. அப்படியானல் இந்தியர்களாகிய நாம் நன்றி கெட்டவர்களா? என்னும் கேள்வி எழுகிறது. ஆழ்ந்து ஆராய்ந்து பார்க்குமிடத்து இந்தியப் பண்பில் Thank you உனக்கு நன்றி என்னும் சொல்லுக்கு இடமில்லை. இதை ஆராய்ந்து பார்ப்போம். வேலைக்காரன் ஒருவனிடம் அவனுடைய எஜமானன் புஸ்தகம் ஒன்றைக் கொண்டுவரும்படி ஆணையிடுகிருன். வேலைக்காரன் அதைக் கொண்டுவந்து தருகிருன். கையில் வாங்கிக்கொண்டு எஜமானன் வேலைக்காரனிடம் Thank you என்று சொல்லுகிருன். எதற்காக அவன் இப்படிக்கூறவேண்டும் என்று யாரும் இதை எண்ணிப் பார்ப்பதில்லை. எஜமானன் சொன்னபடி வேலைக்காரன் புஸ்தகத்தைக் கொண்டுவராவிட்டால் அவன் வேலையினின்று நீக்கப்படுவான். அத்தகைய நிலையிலிருப்பவனுக்கு Thank you என்று நன்றி நவிலுவது பொருளற்ற பேச்சாம். இந்தியப் பழக்கப் பிரகாரம் மானுடனெருவன் தன்னுடைய நண்பனைச் சாப்பாட்டுக்கு அழைக்கிருன். சாப்பிட வந்தவன் சாப்பிட்டான பிறகு Thank you என்று நன்றி நவிலுவதில்லை. நன்றி நவின்ருல் அது மட்டமான மனப்பான்மைக்கு அறிகுறியாகிறது. மேல்நாட்டுப் பழக்க வழக்கப்படி அன்னவன் நன்றி நவிலாவிட்டால் அது மட்டமான மனப்பான்மையாகக் கருதப்படுகிறது. இவை யாவையும் ஆராய்ந்து பார்க்குமிடத்து அந்தந்த நாட்டின் பண்பிற்கேற்றபடியே பேச்சும் அமைகிறது. நன்றி உணருதல் இந்தியப்பண்பு. நன்றி நவிலுதல் மேல் நாட்டுப் பண்பு. ஒருவன் செய்த உபகாரத்திற்குக் கைம்மாருகநன்றிகூறிக் கணக்குப் பூர்த்தியாகிறது. நம்நாட்டில் நன்றி கூருது நன்றி உணர்ந்திருந்து கணக்குப் பூர்த்தியாகாதிருக்கிறது. உடனுக்குடனே நன்றி கூறி அதை மறந்து விடுவது வெளிநாட்டுப் பண்பு. நன்றி மறவேல் என்னும் கோட்பாட்டுக்கு உட்பட யாண்டும் நன்றி உணர்ந்திருப்பது இந்தியப் பண்பாம். ஆதலால் இந்த வெளிநாட்டுப் பண்பை நாம் ஏற்றுக்கொள்ளலாகாது.

**கேள்வி: (201) தெய்வங்களுக்கு உயிர்ப் பலிக்கொடுப்பது முறையா?**

இயற்கையின் நடைமுறையை ஆராய்ந்து பார்த்தால் அதிசயம் ஒன்று வெளியாகிறது. நம்மால் கடைப்பிடிக்க முடியாத சில உண்மைகள் இருக்கின்றன. அவைகளுள் ஒன்று: எந்த உயிரையும் கொல்லாது வாழ்ந்திருத்தலாம். அப்படி எந்த உயிரையும் கொல்லாது வாழ்ந்திருப்பது யாருக்கும் சாத்தியமில்லை. எல்லா உயிர்களும் சுவாசித்தாக வேண்டும். சுவாசிக்கும்பொழுது அனேக உயிர்கள் மாண்டு போகின்றன. இந்த உயிர்க்கொலையை நம்மால் தடுத்து நிறுத்த முடியாது. வாழ்ந்திருப்பதற்குச் சுவாசிப்பது அவசியமாகிறது. எனவே வாழ்ந்திருப்பதற்கு உயிர்ப்பலி நிகழ்ந்தாக வேண்டும். இனி, ஓர் உயிர் வளர்ந்து ஓங்குதற்பொருட்டு ஏனைய உயிர்கள் மடிந்தாக வேண்டும். பாக்டீரியா என்னும் பூமியில் உள்ள உயிர்த்தத்துவம் மடிவதால் மரம் செடி கொடிகள் என்னும் ஸ்தாவர உலகம் உயிர்பெற்று வளர்ந்து வருகிறது. இந்த ஸ்தாவர உலகமே பிறகு ஒன்றுக்கு ஒன்று இரையாகிறது. பிறகு ஸ்தாவர உலகம் அனைத்தும் ஜங்கம உலகத்துக்கு இரையாகிறது. அடுத்தபடியாக ஜங்கமங்களும் ஒன்றுக்கொன்று இரையாய்க் கொண்டு வருகின்றன. இது இயற்கையின் அமைப்பு. இதில் வாழ்ந்து வருகிற மனிதன் தன்வழிபடு தெய்வத்திற்கு எதையேனும் நிவேதனமாகப் படைக்க வேண்டிய நிர்ப்பந்தம் வருகிறபொழுது அவன் உயிர்த்தத்துவத்தைத் தான் உண்மையில் எடுத்துப்படைக்கிருன். அன்ன நைவேத்யம் உயிர்மயம். ஆடு, கோழி உயிர்மயம். இவை இரண்டினுள் அன்ன நைவேத்யம் நாகரிகமானதாகத் தோன்றுகிறது. மற்றது கீழ்த்தரமானதாகத் தோன்றுகிறது. எனினும் தெய்வத்துக்குப் படைத்தல் என்னும் செயலில் உயிரை ஒடுக்குதல் என்னும் கிருத்தியம் அமைந்திருக்கிறது. இதைத் தவிர்க்க யாருக்கும் இயலாது.

# பிரதோஷ விரதம்

இயற்கை ஒரு நியதிக்கு உட்பட்டதாக இயங்கி வருகிறது. முறை பிறழாது இயற்கையில் நிகழ்ச்சிகள் நிகழ்ந்து வருகின்றன. இயற்கையின் சட்டத்தை யாரும் மீற முடியாது. இயற்கையின் சட்டத்திலிருந்து யாரும் தப்பித்துக்கொள்ள முடியாது. இயற்கையின் சட்டத்தை அனுசரித்து நடந்து கொண்டால் நாம் நன்மை அடையலாம். இயற்கையின் சட்டத்துக்கு முறை தவறி நடந்து கொண்டால் நாம் துன்பத்துக்கு உள்ளாகவேண்டும். இயற்கையில் தட்பவெப்ப நிலைகள் காலத்துக்கேற்றவாறும், இடத்துக்கு ஏற்றவாறும் மாறி அமைகின்றன. அதேவிதத்தில் நம் அகத்தை எண்ணம் என்னும் சூட்சும சக்தி இயக்கி வருகிறது. அவ்வெண்ணத்தைத் தூய்மைப்படுத்துவதற்குப் பூஜைகளும், ஜபமும், தியானமும் செய்து வருகின்றோம். சில பூஜைகளைக் காலையிலும், சில பூஜைகளை நண்பகலிலும், சில பூஜைகளை மாலையிலும் செய்ய வேண்டும். பிரதோஷ வழிபாடு மாலை சந்தியில் செய்ய வேண்டும்.

ஒரு மாதத்தில் இரண்டு பட்சங்கள் வருகின்றன. அமாவாசையிலிருந்து பௌர்ணமி வரையிலுமுள்ள பதினைந்து நாட்கள் வளர்பிறை அல்லது சுக்கிலபட்சமாகிறது. பௌர்ணமியிலிருந்து அமாவாசை வரையிலுமுள்ள பதினைந்து நாட்கள் தேய்பிறை அல்லது கிருஷ்ணபட்சமாகிறது. ஒவ்வொரு பட்சத்திலும் பதின்மூன்ருவது நாள் உள்ள திதிக்கு திரயோதசி என்று பெயர். அந்நாள் மாலையில் செய்யும் வழிபாட்டுக்குப் பிரதோஷ வழிபாடு என்று பெயர். இவ்வழிபாடு சிவபெருமானுக்குரிய வழிபாடு ஆகிறது. இவ்வழிபாட்டை முறையாகச் செய்கின்ற பொழுது அது சிவனுருக்கு மகிழ்வு ஊட்டுவது ஆகிறது. பார்வதி சமேதராகவிருக்கும் சிவபெருமானைப்பிரதோஷ நாளன்று வழிபடுவார்கள். அப்படி வழிபடுகின்றவர்களுடைய காரியங்களுக்கு வெற்றி உண்டாகும்படியும், அவர்கள் விருப்பம் நிறைவேறும்படியும் சிவபெருமான் அருள்புரிகின்ருர். இது சம்பந்தமாக ஒரு புராணக் கதையும் உண்டு.

சாண்டில்ய மஹரிஷி என்னும் மகான் ஒருவர் வாழ்ந்து வந்தார். அம்மகானிடம் நற்குணம் வாய்ந்த மாது ஒருத்தி தன் மகனுடனும், பெற்ருேரை இழந்த ராஜகுமாரனுடனும் வந்தாள். அவள் மகன் பெயர் சுசிவிரதன் ஆகும். அரசிளங்குமாரனுடைய பெயர் தர்மகுப்தனுகும். தர்மகுப்தனுடைய ராஜ்ஜியத்தை எதிரிகள் பிடுங்கிக்கொண்டனர். அவன் ராஜ்ஜியத்தை இழந்தவனுக இருந்தான். அவன் மீண்டும் ராஜ்ஜியத்தைப் பெறுவதற்கும், தன் மகன் மரணமிலாப் பெருவாழ்வு அடைவதற்கும் வழி காட்டவேண்டுமென்று அம்மாது மஹரிஷியிடம் பிரார்த்தித்துக்கொண்டாள். பிரதோஷ விரதத்தை அனுஷ்டிக்கும்படி அம்மஹரிஷி அவர்களுக்கு அறிவுறுத்தினர். அம்மஹரிஷியின் அறிவுரைப்படி சுசிவிரதனும், தர்மகுப்தனும் பிரதோஷ விரதத்தை அனுஷ்டித்து வந்தார்கள். சிரத்தையோடும் ஊக்கத்தோடும் பிரதோஷ நாளன்று உபவாசமிருந்து பார்வதி சமேதராகவிருக்கும் சிவனை உபாசித்து வந்தார்கள். அவர்களுடைய உபாசனைக்கிரங்கிய சிவபெருமான் அவர்களுக்கு அருள்புரிந்தார். சுசிவிரதன் சிவபெருமான் அருள்பெற்று அமிர்தகலசம் பெற்று அருந்தி மரணமிலாப் பெருவாழ்வு அடைந்தான். தர்மகுப்தன் சிவபெருமானுடைய அருளினல் கந்தர்வர்களுடைய உதவி பெற்றுத் தனக்கு எதிரிகளாக இருந்த அரசர்களை எல்லாம் போரில் வென்று ராஜ்ஜியத்தைப் பெற்று நல்லாட்சி செய்தான். அவன் நீண்டகாலம் நல்லாட்சி செலுத்திக் கடைசியில் கைவல்ய நிலையை அடைந்தான். இக்கதையிலிருந்து முறையாக விரதம் அனுஷ்டிக்கின்றவர்கள் இகம் பரமாகிய இரண்டிலும் மேன்மை அடைகிருர்கள் என்பது தெளிவாகிறது.

பிரதோஷ விரதத்தை அனுஷ்டிக்க வேண்டிய முறை வருமாறு. பிரதோஷ நாளன்று அவ்விரதத்தை மேற்கொள்கின்றவன் உபவாசம் இருக்க வேண்டும். சூரியன் அஸ்தமிப்பதற்கு ஒரு மணி நேரத்துக்கு முன்பு ஸ்நானம் செய்து கொள்ளவேண்டும். பார்வதி, கனேசன், முருகன், நந்தி ஆகிய தெய்வங்களுக்கு வழிபாடு செய்து சிவனையும் உபாசிக்கவேண்டும்.

ஒரு சதுரம் வரைந்து தர்ப்பைப் புல்லினல் அந்தச் சதுரத்தின்மேல் தாமரைப் புஷ்பம் வரைந்து அதில் கலசம் ஒன்றை வைக்கவேண்டும். அக்கலசத்தில் சிவபெருமானை எழுந்தருளும்படி பிரார்த்திக்கவேண்டும். பிறகு சிவ புராணம், அர்ச்சனை முதலிய ஸ்தோத்திரங்கள் பாடி சிவனை மகிழ்விக்க வேண்டும். நாமஜபம், பஜனை, தியானம் செய்து மனத்தைச் சிவபெருமானிடத்துத் திருப்ப வேண்டும். தியானத்தில் மனம் ஆழ்ந்து மூழ்கி இருக்கவேண்டும். பூஜையின் முடிவில் கலசத்திலுள்ள மந்திர தீர்த்தத்தை எடுத்து அருந்தி விபூதி அணிந்து கொள்ள வேண்டும்.

பிரதோஷ விரதம் அனுஷ்டிக்கிறவர்கள் பிரதோஷ நேரத்தில் சிவன் கோவிலுக்குச் சென்று சிவபெருமானை வழிபடவேண்டும். அன்று விரதமிருப்பவர்கள் அனைவரும் ஒன்று கூடிச் சிவன் கோவிலில் ஜபம், பஜனை, தியானம் ஆகியவற்றைச்செய்தால் மிகுந்த பயனடைவார்கள். பிரதோஷ நேரத்தில் சிவனுக்குச் செய்யும் வழிபாடு சாதாரண நேரங்களில் செய்யும் வழிபாட்டைவிடப் பல மடங்கு பயன் தருகிறது. பிரதோஷ விரதமிருந்து வழிபாடு செய்கிறவர்களுக்குச் சிவபெருமான் சகல சௌபாக்கியங்களையும் தந்து விரைவில் அவருடைய அருளுக்குப் பாத்திரமாகும்படி செய்கின்றார். பிரதோஷ விரதத்தின் மகிமை அத்தகையதாகும்.

ஒவ்வொரு மாதமும்இரண்டுமுறை பிரதோஷ நாட்கள் வருகின்றன. அந்நாட்களில் விரதமிருந்து சிவபெருமானை உபாசிக்கின்றவர்கள் பெரும் பலன் அடைகின்றார்கள். புண்ணிய தினங்களன்று செய்யப்படும் ஆத்ம சாதனங்களுக்குப் பலன் மிக அதிகம் உண்டு. இயற்கை முழுதும் முக்குணமயமாக இருக்கிறது. முக்குணங்களின் தாரதம்மியங்களுக்கேற்ப இயற்கையில் வேற்றுமையைக் காண்கின்றோம். உயிர்களுக்கிடையேயுள்ள வேற்றுமைக்கும் முக்குணங்கள் காரணமாகின்றன. நம்மிடம் தமோகுணம் ஓங்கும்பொழுது செயலின்மையும், உறக்கமும், சோம்பலும் நமக்குரிய இயல்புகளாகின்றன. நம்மிடம் ரஜோகுணம் ஓங்கும்பொழுது சஞ்சலமுடையவர்களாகவும், குழப்பமுடையவர்களாகவும், ஆசைக்கு வசப்பட்டவர்களாகவும் செயல் புரிகின்றோம். நம்மிடம் சத்துவகுணம் ஓங்கும்பொழுது மனம் நடுநிலையில் இருக்கிறது. சாந்தமும் அமைதியுமுடையவர்களாக நாம் அப்பொழுது தென்படுகின்றோம். உலகுக்கு வேண்டிய நற்காரியங்களையும், தெய்வப் பணிவிடைகளையும் பயன் கருதாது ஊக்கத்தோடு செய்வது சத்துவ குணம் ஓங்கியிருக்கும்பொழுது சாத்தியமாகிறது. சத்துவகுணம் ஓங்கும்பொழுது தெய்வீகம் நிறைந்த தேவர்களாகவும், ரஜோகுணம் ஓங்கும்பொழுது கொடுமை மிகுந்த அரக்கர்களாகவும், தமோகுணம் ஓங்கும்பொழுது செத்ததற்கு நிகரான ஜடப்பொருள்களாகவும் நாம் விளங்குகின்றோம். சத்துவ குணத்தை வளர்ப்பது விரதம் அனுஷ்டிப்பதின் முக்கிய நோக்கமாகும். பாலோடு பால் சேர்கிற பொழுது பால் அதிகரிக்கிறது. நம்மிடமுள்ள சத்துவகுணத்தோடு விரத அனுஷ்டானமும் சேரும்பொழுது சத்துவகுணம் மேலும் அதிகரிக்கிறது. பாலோடு நீர் சேர்கிறபொழுது பாலின் தூய்மை கெட்டுப் போகிறது. அங்ஙனம் நாம் உலகப்பற்றுடையவர்களாகச் செயல் புரிகிறபொழுது நம்மிடத்திலுள்ள சத்துவ குணம் மங்குகிறது. சத்துவகுணத்தை வளர்க்கிறபொழுது நாம் சாதனையில் மேலே போகின்றோம். விரதங்களை முறையாக அனுஷ்டிக்கின்றபொழுது சாதனையில் மேலே போவதற்கு அவ் விரத அனுஷ்டானங்கள் உதவியாக இருக்கின்றன. விரத நாட்களில் உணவு எடுத்துக் கொள்ளாதிருப்பதன் மூலம் புலனடக்கம் பழகுகின்றார்கள். ஜபம், தியானம் செய்வதன் மூலம் மனதை உள்முகமாகத் திருப்பப் பயிற்சிபெறுகிறார்கள். சாஸ்திரங்களைப் படிப்பதன் வாயிலாகவும், சத் விஷயங்களைக் கேட்பதன் வாயிலாகவும் வாழ்வைப்பற்றிய உண்மையை அறிகின்றார்கள். விரத தினங்களில் செய்யும் அன்னதானம், பொதுநலப் பணிகள் மூலமாக அவர்களுடைய பாபம் தேய்ந்து அவர்களிடத்துப் புண்ணியம் வளர்கிறது. பொதுவாக விரதங்களை அனுஷ்டிப்பது உடலுக்கும் உள்ளத்துக்கும் பெரும் நன்மையை விளைவிக்கிறது. உடல் நோயிலிருந்து விடுபடுவதும் உள்ளம் தீய வாசனையிலிருந்து விடுபடுவதும் விரதத்தின் மூலம் பெறுகின்ற பெரிய பயன்களாகும்.

# பொருளாதாரக் கொள்கைகள்

( சுவாமி ஸதானந்தர் )

இவ்வுலகில் மானுட வாழ்க்கை நன்கு நடை பெறவும், நாளடைவில் அது தெய்வீக வாழ் வாக மலரவும் பயன்படுபவைகள் புருஷார்த் தங்கள் எனப்படுகின்றன. அவை தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் (அறம், பொருள், இன்பம், வீடு) என்று நான்காகப் பகரப்படு கின்றன. இவை மானுட வாழ்வை நல் வாழ் வாக அமைக்கின்றன. நம் வாழ்வை நல் வாழ் வாக ஆக்க நாம் செய்யும் பிரயத்தனங்கள், முயற்சிகள் எல்லாம் தர்மத்தை அடிப்படை யாகக் கொண்டிருக்க வேண்டும். அருள் இல் லார்க்கு அவ்வுலகமில்லை, பொருள் இல்லார்க்கு இவ்வுலகமில்லை. அதர்மமான வழியில் பொருள் ஈட்டினல், இன்பம் பெற முயன்ருல் இகமும் இல்லை; பரமும் இல்லை. பின்பு வீடு பேறு எப்படி வாய்க்கும்? ஆகையால் தர்மிஷ்டனுய் அறநெறியில் செல்பவனுய் மானுடன் வாழ வேண்டியது அவசியம். வினைப்பயன் இருக் கும் பரியந்தம் நாம் இவ்வுலகில் வாழ்தலைத் தவிர்த்து இருக்கமுடியாது. அதே போல சாவையும் நம்மால் தவிர்க்க முடியாது. வாழ் வும் சாவும், பிறப்பும் இறப்பும் இப்பிரபஞ்ச வாழ்க்கையின் கூறுகள் ஆகும். இவ்வுலகில் எப்படி வாழ்வது, எப்படிச் சாவது என்பதை நாம் கற்றுக்கொள்ள வேண்டியது அவசிய மாகிறது.

இவ்வுலக வாழ்வு நம் இஷ்டம்போல் அமை யாது. பொருளும் இன்பமும் நாம் நினைக்கிற படி எல்லாம் கிடைக்கா. ஆனல் தர்மத் தைக் கடைப்பிடித்து வாழ்தல் என்றும் நம் கைவசம் உள்ளது. தர்மானுஷ்டானத்தின் மூலம் நம் தீய வினைப்பயன்களை யெல்லாம் பயனற்றவை ஆக்கிவிடலாம், ஒழித்துவிட லாம். பிராரப்த கர்மத்தை அனுபவிக்க ஏற்ற சரீரத்தோடு, ஏற்ற சூழ்நிலையில் நாம் பிறக் கிரேம். நமக்கு வாய்க்கிற எல்லா இன்ப துன்பங்களும் நமது வினையின் விளைவே ஆகும்; நமக்கு நாமே செய்துகொண்டவைகள் ஆகும். நமது வினையின் பயன் இங்ஙனமாக நம்மிடம் திரும்பி வந்திருக்கிறது. இதை உணர்ந்து நாம் நல்வினை ஆற்றினல் நமக்கு நல்வாழ்வு வந்து அமையும். தீவினைப்பயனையும் அனுபவிக் காமல் தீராது. அதை அமைதியாக அனுபவித் துத் தீர்ப்பதே வினையின் வேகத்தை ஒழிப்ப தற்கு வழியாகும். அதை உணர்ந்தால் மக்களி டம் உள்ள தீவினை செய்யும் இயல்பு குறையும். வினைப்பயனைப்பற்றித் தவறுதலாகப் புரிந்து கொள்பவரும் அதைப்பற்றிய நினைவே இல்லா திருப்பவரும் என்றுமே இருந்துவருகின்றனர். இப்போது நாம் இருக்கிற நிலைமை முன்வினை யின் விளைவு என்ருல் அதிலேயே இனி நாம் விரும்புகிறவண்ணம் நல்வாழ்வு அமையும்படி யாக நாம் நல்வினையாற்றி அதைப் பெறமுடியும் என்கிற கருத்தும் அமைந்துள்ளது. வினைப் பயன் என்று, செயலற்று, ஊக்கம் குன்றி, நம்பிக்கை அற்றுப் போகவேண்டாம். நம் வாழ்வு நம் வினையின் விளைவு. வினையைச் செம் மைப்படுத்தினல் நல்வாழ்வு தானே அமையும்.

நன்மை தீமை, இன்ப துன்பம், வறுமை செல்வம், பெருமை சிறுமை, மானம் அவ மானம் ஆகிய இருமைகளால் இவ்வுலக வாழ்வு ஆக்கப்பட்டிருக்கிறது. ஒரு நாணயத் தின் இரண்டு பக்கங்களையும் எப்படிப் பிரிக்க முடியாதோ அங்ஙனம் துவந்தங்கள் பிரிக்க முடியாதவை. ஒன்றை ஒழித்தால் மற்றதும் ஒழிந்துவிடும். ஒரே நிகழ்ச்சியில் சிலருக்குத் துன்பமும் மற்றும் சிலருக்கு நன்மையும் விளை வது உண்டு. ஆகையால் துன்பமில்லாத இன்ப உலகம் இல்லை. ஏழ்மையை ஒழிப்போம் என் பதுமுற்றும் நிறைவேருது. அரசியல்வாதிகளின் புஷ்பாலங்காரமான வார்த்தைகள் காதுக்கு இனிய வார்த்தைகளே ஒழிய அவைகள் நடை முறைக்குக் கொண்டுவரச் சாத்தியமானவை அல்ல. முதலில் இத்தகையவர்களிடமிருந்து நம் மக்களை விடுவித்தாகவேண்டும். தங்கள் சொந்த லாபங்களுக்காக உலகை எவ்வளவு கீழ்மைப்படுத்தவும் அவர்கள் தயார். தேசத்தை மேலும் மேலும் தரித்திரநிலைக்கு உள்ளாக்கும் திட்டங்களைக் கைவிடுங்கள் என ஒருவர் பொருத் தமாகச் சொன்னர். ஏழ்மையைப் போக்க வேண்டும், அதைக் கூடியவரை நிவர்த்திசெய்ய வேண்டும் என்பது நியாயமான அவசியமான

பேச்சு. அதற்காகக் கோடிக்கணக்கான ஏழைகளின், உழைப்பாளிகளின் மனப்பான்மையைக் கெடுத்துவிட்டார்கள். அவர்கள் சரியாக வேலை செய்வதில்லை. அவர்கள் தப்புச் செய்தால் கண்டிக்க வழியில்லை. அதற்கு அரசியல் சட்டம் இடம்தருவதில்லை. அரசியல்வாதியும் குறுக்கே நிற்கிறான். ஏழ்மையைப் போக்க ஆக்கரீதியான ஒரு திட்டம் போடவேண்டும். இடையருது உழைத்துத் தங்கள் ஊதியத்தைப்பெருக்கிக்கொள்ள பலர் தயாராக இருக்கவேண்டும்.

ராமகிருஷ்ண மடங்கள் பள்ளிக்கூடங்கள் வைத்து நன்கு நடத்தி வருகின்றன. ஸ்ரீ ராமகிருஷ்ண ஸ்தாபனம் ஒன்றில் ஆசிரியர்களுக்கு வகுப்பு நடப்பது வழக்கம். அந்த வகுப்பில் ஒருநாள் ஆசிரியர் ஒருவர் ஸ்தாபனத் தலைவரிடம் ஆசிரியர்களுக்கு ஐந்து ரூபாயாவது சம்பள உயர்வு தரவேண்டுமென்று கஷ்டங்களைச் சொல்லிக் கேட்டுக்கொண்டார். அப்பொழுது தலைவர் அவர்கள் சொன்ன பதில் சிந்தனைக்குரியது. அது ஒரு நல்ல பொருளாதாரக் கொள்கை, தத்துவம் ஆகும். அது நடைமுறைக்கு வந்தால் எவ்வளவோ நன்மைகள் உண்டாகும்.

"நீங்கள் ஒரு ஆண்பிள்ளை. கிரகஸ்தர். உங்கள் குடும்பச் செலவுக்கு அதிகம் தேவைப்படுகிற ஐந்து ரூபாயை நீங்களே தேடிக்கொள்ள உங்களுக்குத் தெரியவில்லை. உங்கள் முப்பது பேருக்கும் சேர்த்து என்னை நூற்று ஐம்பது ரூபாய் தேடச் சொல்கிறீர்கள். உங்கள் வீட்டைச் சுற்றிக் காய்கறி பயிரிட காலி இடம் உள்ளது. ஜலவசதி இருக்கிறது. உங்கள் வீட்டுக்குத் தேவையான காய்கறிகளை அதில் பயிரிடலாம். அதிகமுள்ளதை விற்கலாம். குருகுலத்துக்கு வாரம் மூவாயிரம் அப்பளம் வாங்குகிறார்கள். அது வீட்டில் செய்யக் கூடியது தானே. செய்யச் சொல்லுங்கள். மார்க்கட் விலைக்கு எடுத்துக் கொள்ளச் சொல்கிறேன். அதில் ஏதாவது சிறிது லாபம் கிடைக்கும், உழைத்த கூலி கிடைக்கும். நம் அச்சகத்தில் ஏராளமான புத்தகங்கள் தைக்க வேண்டியிருக்கின்றன. அதென்ன கற்றுக் கொள்ள முடியாத வேலையா? உங்கள் அவகாச நேரத்தில் அதைச் செய்து ஊதியம் பெறலாம். இப்படி வருமானத்தைப் பெருக்கலாம். அடுத்தது வீண் செலவுகளையும் சுருக்கலாம். அவசியமான செலவுகளையும் தேவையை முன்விட்டு இன்னும் சுருக்கலாம். சாப்பாட்டைக் குறிப்பிட்ட அளவுக்கு மேல் சுருக்காமல் மற்றவைகளைச் சுருக்கலாம். மனமிருந்தால் மார்க்கமுண்டு என்பார்கள். நம் பள்ளியில் ஆசிரியர்கள் தங்கள் வசதி போல் சட்டை இல்லாமல் மேல் துண்டு மட்டும் போட்டுக் கொண்டு வர அவசியமானல் அனுமதிக்கலாம். நம் நாட்டில் சட்டை இல்லாமல் இருப்பது சிரமமில்லை. இப்படி யெல்லாம் புத்திசாலித் தனமாக உழைப்பு, சிக்கனம் மூலம் வாழ்க்கையைச் சிரமம் அற்றதாக ஆக்கிக் கொள்ளலாம்" என்று தலைவர் அவர்கள் சொன்னார்கள். பெரிய நகரங்களில் பங்களாக்களில் பூச்செடிகள் தொட்டிகளில் வளர்ப்பதைப் போலக் காலி இடமில்லாத நடுத்தர குடும்பத்தினரும் தங்கள் மாடி போன்ற இடங்களில் பூத் தொட்டிகளில் காய்கறி விவசாயம் பண்ணலாம் என்று அதிகாரிகள் ஊக்குவித்து வருகிறார்கள். அவரவர் வசதிக்கேற்ற வழிவகைகளையும் சொல்லித் தருகிறார்கள்.

ஆடம்பரம், வீண் செலவு என்பதைப் பற்றி ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாகக் கருதுவார்கள். இன்றைக்குப் படித்தவர்கள் மனித வாழ்க்கைக்குக் குறைந்தபக்ஷம் இவ்வளவு மாத வருமானம் தேவை என்று புள்ளி போடுகிறார்கள். அதற்காகப் போராடுகிறார்கள். இதே அளவு இந்தியாவில் எல்லாருக்கும் கிடைக்கிறதா என்பதைப் பற்றி அவர்கள் சிந்திப்பது இல்லை. விவசாயக்கூலிக்காரனுக்கு என்னகூலி கிடைக்கிறது? எத்தனை ஆயிரம்பேர் நிலைமையை விடத் தன்நிலைமை எவ்வளவோ மேலானதாக இருக்கிறது என்கிற உணர்வும் திருப்தியும் உடையவர்களாகக் கடவுளுக்குநன்றி பாராட்டுதல் பழங்கால முதியோர் பண்பு. அவர்கள் போதித்ததும் அப்படியே. இன்றோ தன்னைக் காட்டிலும் அதிக வருமானமுள்ளவனைப் பார்த்து ஒருவன் பொறுமைப்படுகிறான். தன்னைக் காட்டிலும் ஏழையைப் பார்த்து அனுதாபப்படுவார் யாருமில்லை. திருப்தியும் அனுதாபமும் நல்லதா? பொறுமை நல்லதா? என்று சிந்தியுங்கள். உழைப்பும், சிக்கனமும் நல்லதா? வீண் ஆர்ப்பாட்டமும் போராட்டமும் நல்லதா?

என்று சிந்தியுங்கள். இப்பிரபஞ்சத்தின் நடைமுறையை, தத்துவங்களை நம்மால் மாற்றி அமைக்க முடியாது. பருத்தி நூல் துணிகள் போதும். ஆண்களுக்கு உள் ஆடையாக கௌபீனம் போதும். மற்றவை எல்லாம் வீணே. பெண்களுக்கு உள் ஆடைகள்வேண்டாம். நாமே நம் துணிகளைத் துவைத்துக்கொள்ளலாம். வாசனைத் திரவியங்கள் வேண்டாம். டுத் பிரஷ், பேஸ்ட் எதற்கு? லாகிரிவஸ்துக்கள் ,நச்சுத்தீனி எதற்கு ? சினிமாப் பார்ப்பதால் மனம் கெட்டு விடுகிறது. ஆபாசப் பத்திரிகைகள் எதற்கு ? இப்படிச் சிந்தித்துப் பாருங்கள். எத்தனை கோடி பணம் மீதமாக்கிவிடலாம். இதனால் தேசத்தில் நிலவுகிற துணி, பேப்பர், உணவு ஆகிய எல்லாப் பற்றாக்குறைகளையும் சரிகட்டிவிடலாம். இன்னும் எவ்வளவு எளிமையாக வாழலாம், வாழ முடியும் என்பது இந்தியாவின் கொள்கை ஆராய்ச்சி ஆகும். இன்னும் எவ்வளவு அதிகமாக இன்பம் துய்க்கலாம், ஆடம்பரமாக வாழலாம் என்பது மேல்நாட்டின் கொள்கையாகும். இதில் எது சிறந்தது ? எது பண்புடையது? என்பது சிந்தனையுள்ள அடக்கமுள்ள மனிதனுக்குத் தானே விளங்கும்.

தனி மனிதனின் வருமானங்களை அதிகப்படுத்திக்கொள்வதற்கான உபாயங்களை அரசாங்கம் தூண்டிக்கொண்டுதான் இருக்கிறது. விவசாய வேலைக்காரர்களில் சிலர் ஆடு வளர்த்து, பசு, எருமை வளர்த்து, கோழி வளர்த்து வருஷத்தில் ஐந்நூறு, அறுநூறு ரூபாய் வருமானம் அடைகிறார்கள். அதில் அதிகச் செலவு இல்லை. வீட்டில் உள்ள முதியோர் அவைகளைப் பார்த்துக்கொள்கிறார்கள். முன்பு சர்க்கார், பஞ்சாயத்துக்களின் வருமானங்களைப் பெருக்க மீன் தொட்டிகளை உருவாக்கினர்கள். அது விரயமாகிவிட்டது. அது நல்ல பயன் அளிக்கவில்லை. இம்முயற்சியைத் தனி மனிதர்கள் செய்து பயன் அடையலாம். வங்காளத்தில் விடுதோறும், நம் வீட்டுக் காய்கறி தோட்டம்போல, மீன் வளர்ப்பதற்கென ஒரு குட்டை இருக்கும். பங்களாக்களில் அழகுக்காக மீன் தொட்டி வைத்துள்ளார்கள். ஏழை அந்த உபாயத்தால் தன் ஜீவனத்திற்கு வருமானம் தேடிக்கொள்ளலாம்.

இகலோக வாழ்வில் இப்போது சௌபாக்கியமாக, பணக்காரர்களாக வாழ்கிறவர்களும் இப்படியெல்லாம் நல்ல விதமாக சிந்தித்துச் செயல்படவேண்டும். அதனால் அவர்களுடைய சௌபாக்கியம், புண்ணியம் வளரும். எந்த நற்செயல்களின் விளைவாக அவர்கள் இப்போது பாக்கியவான்களாக வாழ்கிறார்களோ அந்த நற்செயல்கள் இன்னும் வசதியான இந்த ஜன்மத்தில் மேலும் ஓங்கட்டும். இதன் விளைவாக அவர்கள் இகலோக பாக்கியங்களைத் தாண்டிக் கடவுள் அருளுக்குப் பாத்திரமாவார்கள். அப்படி இல்லாவிட்டால் அனைத்தும் ஒரு நாள் கைநழுவிப் போய்விடும், தேய்ந்து போய் விடும். ஏழை, எளியவர்களைக்கண்டு அவர்கள் மனம் கசியட்டும். சர்க்கார் உங்கள் வருமானங்களில் பெரும் பகுதியை வரியாகப் பிடுங்கி எடுக்கிறது. அது உருப்படியாகப் பயன்படுவதில்லை. ஏராளமாக விரயம் ஆகிறது. விளைபொருள்களை உற்பத்தி செய்தவனுக்கு நியாயமான, நேர்மையான விலை கொடுங்கள். பொருள்களை உற்பத்தி செய்கிறவர்களுக்கு, உழைக்கிறவர்களுக்குஅவர்கள் அறியாமலேயே நன்மை செய்யுங்கள். உற்பத்திப் பொருள்களை வாங்குகிறவர்களுக்குச் சகாயம் செய்யுங்கள். இப்படி உங்கள் லாபம் இவர்களுக்கெல்லாம் நேரடியாகப் பயன்படட்டும். இம்முறையில் உங்கள் லாப விகிதங்களைக் குறைத்துக்கொள்ளுங்கள். எளிய வாழ்வின் மூலமாக மீதமாகிற செல்வத்தையும் மக்களுக்குப் பயன்படும்படியாக வைத்திய உதவி செய்வீர்களாக. நர சேவை நாராயண சேவை ஆகும். ஜீவசேவை சிவ சேவை ஆகும். இதுவும் ஒரு கடவுள் வழிபாடே ஆகும். நவீன பள்ளிக்கூடங்கள் வைக்கவேண்டாம். அவைகளால் ஒரு பிரயோஜனமும் இல்லை என்பது நன்றாக நிரூபணம் ஆகிவிட்டது. நம் பழங்கால கல்வி முறையை மீண்டும் புதுப்பிக்க முயல்வீர்களாக. இரவில் பொது இடத்தில் மக்களை ஒன்று கூட்டி ராமாயணம், மகாபாரதம், பாகவதம் முதலிய பக்தி நூல்களைப் படித்து விளக்குங்கள். இதனால் உலக வாழ்க்கைக்கு வேண்டிய நல்லறிவும், பக்தியும் வளரும். மக்கள் நல்லவர்களாக வாழ்வார்கள். பக்தர்கள் சரித்திரங்களை நாடகமாக நடித்துக் காட்டவும் ஏற்பாடு செய்யலாம்.

அதனால் மக்களுடைய உணர்ச்சிகள் நன்கு விழித்தெழும். கிராம, நகரப் பொது சுகாதார அபிவிருத்திக்காக நீங்களே செலவு செய்யுங்கள். அரசாங்கத்திற்கும், அரசியல் வாதிகளாகிய தேசத்துரோகிகளுக்கும் நீங்கள் தருகிற பணமெல்லாம் விரயமாகின்றன. நல்ல குடிநீர், கக்கூஸ் வசதி இவைகளை அமைக்கலாம். இப்படிச் சிந்தித்து நல்ல காரியங்களை நீங்களே செய்யுங்கள். அக்காலத்தில் தண்ணீர்ப் பந்தல், அன்ன சத்திரங்கள், சாலையில் சுமைதாங்கி வைத்தல், விலங்குகளுக்குத் தண்ணீர்த்தொட்டி, நெடும் சாலைகளில் வழிப்போக்கர்கள் யாத்திரிகர்கள் தங்கவும், சமைத்துச் சாப்பிடவும் மண்டபங்கள் அமைத்தல், ஆலயங்களைப் புதுப்பித்தல் இத்தியாதி நற்காரியங்களையெல்லாம் செய்தார்கள். இவைகளில் இக்காலத் தேவைக்குத் தகுந்தபடி வேண்டியவைகளைச் செய்யலாம். ஆலயங்களைப் புதுப்பித்தல் இப்போது ஒரு அவசியமான காரியம். இப்படியெல்லாம் உங்கள் செல்வத்தைப் பயன்படுத்துங்கள். செல்வம் நல்ல வழிகளில் செலவழிக்கப்படுமானுல் பயனுடையது, சிறப்புடையது ஆகிறது. அது சும்மா வெறுமனே இருந்தால், எங்கோ பூமியில் புதைந்திருக்கிற தங்கச் சுரங்கத்திற்கும் அதற்கும் என்ன வித்தியாசம்? செல்வம் வாழ்க்கைக்குப் பயன்பட வேண்டும். இப்படியெல்லாம் செய்தால் நீங்கள் உண்மையிலேயே பக்தர்கள், அன்புடையவர்கள் ஆவீர்கள். வெறும் வாய்ப் பேச்சினுல் என்ன பிரயோஜனம்? உங்கள் அன்பும் நற்குணங்களும் செயலாகப் பரிணமிக்கவேண்டும். உங்களிடம் சேர்ந்துள்ள செல்வம் இறைவன் தந்த செல்வமாகும். அதை லோகஹிதத்துக்காக உங்களிடம் ஒப்புவித்துள்ளார். நல்ல டிரஸ்டிகளாக நடந்துகொள்ளுங்கள். அவர் அருள் பாலிப்பார். இறைவனுக்குப் பிரியமானவனுக வாழ்வதைவிட இறைவன் அருளுக்குப் பாத்திரமாவதைவிட வாழ்வில் வேறு என்ன பாக்கியம் வேண்டும்?

இகலோகத்தில் முறையாக, சீலமாக, தர்மமாக, நேர்மையாக, ஒழுக்கமாக வாழாவிட்டால் பரலோக வாழ்வும் இல்லை. நெறியான வாழ்வு இன்றி ஆத்மசாதனம், சமய வாழ்க்கை இல்லை. இகலோகத்திலும் சௌக்கியமில்லை. ஒற்றுமை அன்பு இல்லை, யக்ஞும் இல்லை. ஆகையால் இகபரம் இரண்டிற்கும் நன்மை தருவதாக அடிப்படையாக இருக்கிற நன்னெறியில், அறவாழ்வில் நம் மக்கள் கருத்துச் செலுத்துவார்களாக. சுயநலங்களை யெல்லாம் துறப்பார்களாக. சுயநலமே எல்லாத் தீமைகளுக்கும் மூலகாரணம். எளிய வாழ்வு, உயர்ந்த சிந்தனை என்பது நமது தேசீய லக்ஷியம். நல்வாழ்வின் சூத்திரம். தூய்மையும் தியாகமும் நமது தலையாய லக்ஷியம். உலகுக்குப் பயன்படும்படியாக வாழ்தல் இறைவனுக்கு நம் வாழ்வைப் படைப்பது ஆகிறது. இது மானுட வாழ்வின் உயர்ந்த பண்பட்ட நிலை. பறித்தல் விலங்கு, மாக்கள் நிலை. நாம் உயர்ந்த பண்பட்ட மக்களாக வாழ வேண்டும். இவ்வுலகின் தேவாலயம் போன்று கர்ப்பக்கிரஹம் போன்று படைக்கப்பட்டுள்ள நம் புண்ணிய தாய்த்திருநாட்டின் மூலமூர்த்தி, அதிஷ்டான தெய்வம் சங்கரமஹாதேவன் ஆவார். தியாகராஜன், நீலகண்டன், சந்திரசேகரன், தியாகம், தூய்மை, அன்பு, எளிமை, அடக்கம் ஆகியவற்றின் சின்னம் ஆவார். அவரைப் பின்பற்றி இந்தத் தெய்வ குணங்களையெல்லாம் நாமும் உடையவர்களாகஆவோமாக.

இவற்றை யெல்லாம் படிக்கும்போது ஔவையாரின் மெல்லிய குரல் ஒன்று கூடவே ஒலிக்கிறது. ஆம். இவையெல்லாம் நாம் சிறு வயதில் மீண்டும் மீண்டும் சொல்லியவை. அவைகளையும் இது சமயம் ஞாபகப்படுத்திக்கொள்வோம். அவைகள் நமக்கு நன்மை பயக்கும்.

"பொருள்தனைப் போற்றிவாழ்.
ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்.
அஃகமும் காசும் சிக்கெனத் தேடு.
கிட்டாதாயின் வெட்டென மற.
சோம்பர் என்பவர் தேம்பித்திரிவர்.
திரைகடல் ஓடியும் திரவியம் தேடு.
தேடா தழிக்கின் பாடாய் முடியும்.
பன்னிய பயிரில் புண்ணியம் தெரியும்.
முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்.
வளவன் ஆயினும் அளவறிந்து அளித்துண்.
தனந்தேடி உண்ணுமல் புதைக்க வேண்டாம்.
ஆனமுதலில் அதிகம் செலவானுல்......"

இப்பொன்மொழிகளைக் கடைப்பிடித்து வாழ்வைச் செம்மைப்படுத்திக்கொள்வோமாக.

# புத்தர் ஆவது குறிக்கோள்

(சுவாமி துருவானந்தர்)

உலகிலுள்ள சில மதங்கள் மற்ற மதத்தவர்களைத் தங்கள் மதத்திற்கு மாற்ற இன்றும் முயன்று வருகின்றன. அதன் காரணமாக எத்தனையோ உயிர்களும் பலியாகியுள்ளன; கோர யுத்தமும் நடந்துள்ளது. ஆனால் பௌத்த மதம் மாத்திரம் அத்தகைய மதமாற்றும் செயலில் ஈடுபடாது அஹிம்சா தர்மத்தில் நிலைநின்றே உலகம் முழுதும் ஓரளவு பரவியுள்ளது. அந்தப் பௌத்த மதத்தைத் தோற்றுவித்தவர் யார்? அவர்தாம் கௌதம புத்தர் என்று எல்லாராலும் பாராட்டப் பெற்ற பௌத்த துறவி ஆவர். சான்றோர்கள் எங்கும் பிறக்கக்கூடும். அரண்மனையில் பிறந்து அரசனாக வேண்டியவர் ஆண்டியாக அலைந்து அரசர்க்கு அரசராகத் திகழ்ந்தார் என்றால் அவரை அங்ஙனம் உயர்த்தியது எது? ஆசையைத் துறந்து தம்மை உலகுக்கு அர்ப்பணித்தார். உலகத்திலுள்ள மக்கள் யாவரும் மாயையில் கிடந்து தத்தளித்துக்கொண்டு அதிலிருந்து தப்பமுடியாது தவியாய்த் தவிக்கின்றனர். அந்த மாயை என்பது என்ன? காம காஞ்சனமே மாயை எனப்படுகிறது. இறைவனை அடைந்த சான்றோர்களனைவரும் காம காஞ்சனத்தைத் துறந்தவர்கள். புத்தர் பெம்மான் சுகபோக சூழ்நிலையில் வாழ்ந்தார். அவர் விரும்பியிருந்தால் எல்லாப் போக போக்கியங்களையும் அனுபவித்துக்கொண்டே தம் வாழ்நாளைக் கழித்துக் கொண்டிருந்திருக்க முடியும். ஆனால் உலகம் தரும் இன்பம் நிலையில்லாதது என்பதை அறிந்தார். வாழ்வு முழுதும் துன்பத்தின் உறைவிடம் என்பதை உணர்ந்தார். துன்பத்திலிருந்து விடுதலை பெறுவது ஆசையைத் துறத்தலின் மூலமே ஆகும் என்பதை தெளிந்து காம காஞ்சனத்திற்கு நிலைக்களனாயிருந்த தன் வீடு, வாசல், மனைவி, மகவு அனைத்தையும் துறந்து காடு ஏகினார். புத்தரின் துறவை எண்ணிப் பரிதாபப்படுகிற கூட்டமும் உண்டு. அவரைப் போன்று அனைத்தையும் துறந்து மெய்ஞ்ஞானம் அடையத் துறவுபூண்டவர்களைக் கண்டு அலட்சியப்படுத்துகிற கூட்டமும் உண்டு. உலகம் தருகிற இன்பத்தை, அகப்படுகிற அளவு அனுபவித்துவிடுவதே தங்களுடைய இப்பிறவியின் இலட்சியம் என அவர்கள் எண்ணி வருகின்றனர். அல்லும் பகலும் போக சிந்தனையில் உழல்கின்றனர். ஆனால் அவர்களும் ஆழ்ந்த உறக்கத்தின் மூலம் அமைதி, சாந்தியை அடைகின்றனர். ஆகவே புத்தரைப் போன்று ஒவ்வொருவரும் காம காஞ்சனத்தை ஒவ்வொரு நாளும் சிறிது நேரமாகிலும் மறந்து வருகின்றனர்.

இவ்வையக வாழ்வில் ஒன்றை ஒன்று கொன்றுதான் ஒவ்வோர் உயிரும் தங்களின் வாழ்வை நடாத்துகிறது. புத்தர் சிறுவனாக இருந்தபொழுது பெற்றோர் இவரை ஒரு மேட்டின் மீது உட்கார வைத்துவிட்டுப் பூமியை உழுதுகொண்டிருந்தனர். இவர் அருகில் ஒரு சிறு பூச்சி ஓடியது. அப்பூச்சியை ஒரு பல்லி பிடித்தது. அப்பல்லியை ஒரு கோழி வந்து கொத்தித் தின்றது. அக்கோழியை ஒரு பருந்து சரேலென்று கௌவிக்கொண்டு சென்றது. அப்பருந்தை வேடன் ஒருவன் அம்பால் எய்து கொன்றான். இவ்வளவும் சில நிமிடங்களுக்குள் நடந்தேறிவிட்டன. சிறுவனுடைய அறிவு வேலை செய்யத் தொடங்கியது. இவ்வுலகில் ஓர் உயிர் மற்றோர் உயிரைக் கொல்லாது வாழ முடியாது என்று எண்ணினார். இக்குறை நிலையைப் போக்க யக்ஞம், தானம், தவம் முதலியவைகளைச் செய்வது அவசியமாகிறது. ரோஜாச் செடியில் முள் இருப்பதால் அதை யாரும் பயிரிடாது இருந்துவிடுவது கிடையாது. அங்ஙனம் நம் வாழ்வில் எவ்வளவோ குறைகளிருப்பினும் நம் வாழ்வு பிறர் நலனுக்குப் பயன்படுவதால் அது வேண்டப்படுகிறது.

இயற்கை என்னும் சாஸ்திரத்திற்கு நிகரானது உலகில் எதுவும் கிடையாது என்கிறான் மேல்நாட்டு அறிஞன் ஒருவன். இயற்கை நமக்கு ஓயாது பாடம் புகட்டிக்கொண்டேயுள்ளது. அதைப் புரிந்து, தெரிந்துகொள்ளும் பக்குவம் நம்மிடமிருந்தால் நாம் விரைவில் சான்றோராக முடியும். நம் கண்முன் நாள்தோறும் ஒவ்வொருவராக மாய்ந்து போகிறார்கள். நாம்

அவர்களைச் சுடுகாட்டிற்கு அனுப்பிக்கொண்டு தான் இருக்கிறோம். ஆனால் நாம் என்றைக் காவது மாண்டு போவது உறுதி என்ற எண்ணம் நமக்கு வருகிறதா? நாம் சாகவத மாக இருப்போம் என்று திடமாக நம்புகிறோம். உலகில் பிறந்த நாம் என்றாவது ஒருநாள் இறப் பது உறுதி என்ற எண்ணமில்லாது உலக ஆசையை விரும்பி இறைவனை மறந்து வாழ் கிறோம். சுடுகாட்டிற்குப் போகும் வாய்ப்பு ஏற்படுகிறபொழுது மனதில் விரக்தி சில நிமிட நேரம் இருந்து பின் மறைகிறது. நோயாளி யைப் பார்க்கிற பொழுது நமக்கு இதுபோன்ற நோய் வராதிருக்க வேண்டும் என்று முப்பத்து முக்கோடி தேவர்களை வேண்டுகிறோம். துறவி களைப் பார்க்கிறபொழுது நம்முடைய சிறுமை களை எண்ணி வெட்கமுறுகிறோம். அவர்களைப் போன்று நாமும் ஏன் வரலாகாது என்ற ஊக் கம் உள்ளத்தில் சுடர்விட ஆரம்பிக்கிறது. இம்மூன்று காட்சிகளும் சற்று ஏறத்தாழ எல் லார் உள்ளத்திலும் ஒரு சிறு கலக்கத்தை உண்டுபண்ணிச் சென்றாலும் புத்தரின் வாழ் வில் பெரும் மாறுதலை உண்டு பண்ணி அவரை உலகம் போற்றும் உத்தமனாக மாற் றின.

நாம் வாழ்வது விஞ்ஞான காலம். எதையும் ஆராய்ந்தே முடிவுக்கு வரும் ஆராய்ச்சியாளர் கள் வாழும் காலம். இக்காலத்திலும் படித்துப் பட்டம் பெற்ற பாமரர்கள் நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டே வருவது வியப்பாயுள் ளது. அதிலும் உண்மையை உணராது மந்திரம், தந்திரம், செப்படிவித்தை முதலியவைகளில் மனம் வைத்து மயங்குகிற கூட்டம் உலகில் எங் கும் உள்ளது. சித்திகள் ஏதாவது செய்தால் தான் மக்கள்தங்களை மதிப்பார்கள் என்று அரை குறை சாதனம் செய்தவர்களும் சித்திகள் செய் வதில் ஈடுபடுகின்றனர். சித்திகள் பண்ணுபவர் கள் ஏமாற்றுக்காரர்கள். சித்தி பண்ணுவதன் மூலம் அவர்கள் வீழ்ச்சியடைகின்றனர் என்று ராமகிருஷ்ண பரமஹம்சர் சித்து பண்ணு வதை ஆமோதிக்கவில்லை. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த புத்தர் பெம்மானும் சித்து பண்ணுவதை அறவே விட்டு விட்டார். சாதனத்தில் மேலே போகிற பொழுது சிற்சில சமயங்களில் நேருகிற அனுபவமே சித்திகளாக வந்து நம்மை மயக்குகின்றன. பௌத்த சங்கத்திலிருந்த ஒரு சிஷ்யர் சித்து பண்ணினார் என்று கேள்விப்பட்டதும் அவரைச் சங்கத்திலிருந்தே புத்தர் விரட்டிவிட்டார். புத்தர் சித்து பண் ணாது பாமர மனிதனும் புரிந்துகொள்ளுமாறு தத்துவத்தை உபதேசித்தார். அவருடைய தெளிவான உபதேசம் கேட்பவர் மனதில் விவேகத்தை ஊட்டுகிறது. கௌதமை என்ற மாது தன் அருமைக் குழந்தையைச் சீராட்டி வளர்த்து வந்தாள். குழந்தையை விட்டுப் பிரி யாது பாசம் அதிகம் காட்டுபவர்களுக்கு அவர் களுடைய உடைமையாகிய குழந்தை அவர் களை விட்டுப் பிரிந்துவிடும் போலும். அவளு டைய குழந்தை ஒருநாள் நோய்வாய்ப்பட்டது. எவ்வளவோ சிகிச்சை அளித்தும் பயனில்லாது குழந்தை மாண்டது. பிள்ளையின் பிரிவு தாய்க் குப் பெரும் வேதனையை அளித்தது. செத்த குழந்தையைத் தூக்கித் தோளில் போட்டுக் கொண்டு அலைந்தாள். தன் குழந்தைக்கு உயிர் கொடுப்பார் யாரும் இல்லையே என்று ஏங்கினாள். சஞ்சலப்பட்ட மனம் படைத்த அம்மாதுவுக்குச் சமாதானம் சொல்லச் சிலர் புத் தர் பெம்மானிடம் அவளை அனுப்பி வைத்தனர். இறந்த குழந்தையோடு வந்த தாயைக் குறிப் பால் உணர்ந்த புத்தர் பெம்மான் அவ்வம்மை யிடம், “எந்த வீட்டிலிருந்தாவது ஒரு பிடி கடுகு வாங்கிவா. ஆனால் கடுகு வாங்கும்வீட்டில் இது வரை யாரும் இறந்திருக்கக் கூடாது. அப்படி சாவு நடவாத வீடுபார்த்துக் கடுகு வாங்கி வர வும்” என்று கூறினர். இறந்த குழந்தையோடு ஒவ்வொரு வீடாக ஏறினாள். வேண்டிய கடுகு கிடைத்தது. ஆனால் தன் வீட்டில் யாரும் சாகவில்லையே என்ற செய்திதான் கிடைக்க வில்லை. வெண்கலச் சிலைபோல இருந்த என் மகள் போனமாதம் போய்விட்டாளே என்ற விம்மல் ஒரு வீட்டில். தொட்டுக் கட்டிக் காப் பாற்றிய கணவன் என்னைக் கைவிட்டுப் போய்விட்டாரே என்ற கைம்பெண் கண்ணீர் விட்ட காட்சி மற்றொருவீட்டில். இப்படி வீட் டுக்கு வீடு மரணச் செய்தி ஒலித்தவண்ண மிருந்தது. எல்லார்க்கும் ஏற்பட்டிருக்கிற மரணம் தானே தன் குழந்தைக்கும் ஏற்பட்டது என்று அம்மாது எண்ணியதும் இருள் அகன்

றது. புத்தரின் போதனையால் மனம் மாறிய அம் மாது இறந்த குழந்தைக்குச் செய்யவேண்டிய ஈமக் காரியங்களைச் சுடுகாட்டிற்குச் சென்று செய்துவிட்டுப் பௌத்த சங்கத்தில் சேர்ந்தாள். புத்தரின் இந்த நடவடிக்கை எல்லாக் காலங் களுக்கும், யாருக்கும் பயன்படும். அவர் இறந்த குழந்தையைக் காப்பாற்ற எந்தச் சித்தும் பண்ணவில்லை. இயேசுநாதர் செத்த வர்களைப் பிழைக்க வைத்தார், ஞானசம்பந்தர் இறந்துபோன பூம்பாவை என்ற பெண்ணை உயிர் பெற்றெழச் செய்தார், சுந்தரமூர்த்தி நாயனார் முதலை வாயிலிருந்து குழந்தையை மீட்டு உயிர் கொடுத்தார் என்றெல்லாம் படிக் கிறோம். ஆனால் இன்றோ அங்ஙனம் உயிரைக் கொடுத்தவர்களும் இல்லை; உயிர் பெற்று எழுந்தவர்களும் இல்லை. எல்லாரும் ஒருநாள் சொல்லாமல் போய்த்தான் தீரவேண்டும்.

இந்தியாவில் தோன்றிய பௌத்தமதம் இந்தியாவிலேயே பரவாது வெளிநாடுகளில் மட்டும் எப்படிப் பரவியுள்ளது என்று சிலர் கேட்கின்றனர். பௌத்த மதத்திலிருந்த நல்ல கிரியைகளையெல்லாம் ஆதிசங்கரர் எடுத்து இந்து மதத்தில் சேர்த்தார். அது அவர் பண் ணிய ஒரு சிறந்த செயல். ஷோடசோபசாரப் பூஜையிலுள்ள கிரியைகளையும், ரதஉத்சவத் தையும் புத்த மதத்திலிருந்து எடுத்து இந்து மதத்தில் சங்கரர் சேர்த்துவிட்டார். ஆகவே புத்த மதம் இந்து மதத்தோடு ஐக்கியமாகிவிட்டது.

கர்மகாண்டத்தை அழிக்க வந்தவர் புத்தர். கடவுள் பெயரால் நடக்கும் அக்கிரமங்களையும், உயிர்ப்பலிகளையும் சகிக்கமாட்டாமையினால் அவர் கடவுளைப் பற்றி எதுவும் பேசக்கிடை யாது. அதனால் அவரை நாஸ்திகன் என்று கூறிவிடமுடியாது. உருவ வழிபாடு கூடாது என்று கூறிவந்த அவருடைய உருவத்தையே கோயிலில் வைத்து வழிபட ஆரம்பித்தனர் அவருடைய சிஷ்யர்கள். பௌத்த மதம் கூறு கிற முடிவான நிலையாகிய மஹா நிர்வாணமும், வேதாந்தம் கூறுகிற நிர்விகல்ப சமாதியாகிய பிரம்ம நிர்வாணமும் ஒன்றே.

பௌத்தமதம் கடவுளைப்பற்றிக் கூறாது பஞ்ச சீலங்களை வற்புறுத்துகிறது. பதஞ்சலி யோக சூத்திரம் கூறுகிற இயம நியமங்களெல்லாம் அதில் தெள்ளத்தெளிவாகச் சொல்லப்பட்டிருக் கின்றன. பௌத்த மதத்திற்குரிய சாஸ்திரம் தம்மபதம். அது புகட்டுகிற பிரகாரம் நடக்கிற பிக்ஷு நிர்வாண நிலையை அடைவான். மனம் அடங்க ஏகாந்த வாசம் செய்தல் பௌத்த மதத் தில் சொல்லப்பட்டுள்ள சாதனங்களில் ஒன்று, பன்னிரண்டு ஆண்டுகள் புறவுலகத் தொடர்பு ஏதுமின்றி ஒருவன் தன்னை மறந்து சாதனங் களில் ஈடுபடுகிறபொழுது அவன் புத்தன் ஆகி றான். புத்தமதம் அஹிம்சையை வலியுறுத்தி யது. அன்பை அணிகலனாகப் போற்றியது. சுயமுயற்சிக்கு இடம் தந்தது. ஆனால் அஹிம்சை என்ற பெயரால் விவேகம் போய் கோழைத் தனம் தலையெடுத்தது. இந்தியாவில் இஸ்லா மியர்களின் படையெடுப்புக்கும், கிறிஸ்தவர் களின் உட்புகுதலுக்கும் காரணம் பௌத்த மதத்தில் ஏற்பட்ட குறைபாடே. ஆண்பால ரோடு பெண்பாலர் கலந்து பழகுதல் கூடாது என்பது பொது விதி. இது ஆத்ம சாதகர் களுக்கு விதிக்கப்பட்ட கடுமையான விதி. ஆனால் புத்தர் காலத்திற்குப் பிறகு பௌத்த துறவிகளும், மாதர் பிரிவைச் சேர்ந்த பிக்ஷுணி களும் கலந்து பழகியதால் பௌத்த சங்கம் உருக்குலைந்து நம் நாட்டில் இருக்கும் இடம் தெரியாது போய்விட்டது.

புத்தரின் போதனைகள் அனைத்தும் உபநிஷ தங்களின் உண்மையான கருத்துக்களையே ஆதாரமாகக்கொண்டவை என்பது பல அறி ஞர்களின் துணிபு. கர்மகாண்டத்தை ஒழிக்க வந்த புத்தர் கடவுளைப்பற்றிப் பேசாது தன் னைத் திருத்தியமைக்கும் செயலை வலியுறுத்தி வந்துள்ளார். "ஆசையே துன்பத்துக்குக் கார ணம் என்பது அவர் கண்ட உண்மை. நிராசை யின்றித் தெய்வமுண்டோ" என்கிறார் தாயு மானவர். அற்றது பற்று எனில் உற்றது வீடு என்கிறார் நம்மாழ்வார். ஆசைப் படப்பட ஆய்வருந் துன்பம். ஆசை விட விட ஆனந்தம் தானே என்கிறார் திருமூலர். புத்தர் போதனை எம்மதத்திற்கும் சம்மதம். தன் முயற்சியால் எதையும் பெறலாம் என்றார் புத்தர் பெம்மான். வைகாசிப் பௌர்ணமியில் பிறந்து வைகாசிப் பௌர்ணமியில் பூர்ண ஞானமடைந்த அம் மகான் வைகாசிப் பௌர்ணமியன்று பூதவுடலை உகுத்தார். மக்களுக்கு அவருடைய வாழ்வு என்றும் வழிகாட்டும்.

# சங்க இலக்கியங்களில் சமயக் கருத்துக்கள்

( வித்துவான் ஆதி. பாலசுந்தரன் M. A. )

புவி இயலில் “ மாந்தர் பரப்பியல் ” (Human Geography) என்ற ஒரு பகுதி உண்டு. பழங்காலத்தில் இருந்து மனித இனம் பல வகையான நாகரிகங்களைப் பெற்றுப் படிப்படியாக வளர்ச்சியடைந்து வந்துள்ள விதத்தை இப்பகுதி கூறுகிறது.

மக்களுக்கு அறிவு வளர்ச்சி ஏற்படுவதை அடிப்படையாகக் கொண்டும், சூழ்நிலை மாறுபாடு அடைவதை ஆதாரமாகக் கொண்டும் மாந்தர் வாழ்க்கைமுறை மாறுபாடு அடைகிறது.

காலந்தோறும் மாறுபாடு அடைகின்ற வாழ்க்கை முறைக்கு ஏற்றபடியே, சமுதாயப் பண்பாட்டு நிலை (Socio cultural interaction) உருவாகிறது. இத்தகைய பண்பாட்டு நிலை உருவாவதற்கு ஏற்ற வண்ணம் சமுதாயத்தில் எத்தனையோ மாறுபாடுகள் உண்டாகின்றன.

மனித இன வரலாற்றில் இத்தகைய மாற்றங்கள் உலகம் எங்கும் ஏற்பட்டுள்ளன். தமிழ் நாட்டிலும் இம்மாதிரி மாற்றங்கள் காலந்தோறும் உண்டாகியுள்ளன.

இத்தகைய மாற்றங்களில் அனைவரும் ஏற்றுக்கொள்ளக்கூடிய மாற்றங்களும் உண்டு. இவற்றை ஏற்றுக்கொள்ளத்தக்க மாற்றங்கள் (Change of acceptance) என்று சொல்லுவார்கள்.

ஏற்றுக்கொள்ளத் தகாத மாற்றங்களும் உண்டு. இவற்றை மறுக்கத் தக்க மாற்றங்கள் ( Change of rejection ) என்று கூறுவார்கள்.

ஏற்றுக்கொள்ளத் தக்க மாறுபாடுகள் மண்ணில் நல்லவண்ணம் வாழ்வதற்கு உறுதுணையாக அமைகின்றன. நமக்குக் கை இருக்கிறது எடுத்து உண்பதற்கு என்ற உணர்வு இல்லாமல் பச்சை இறைச்சியையும், காய் கனி கிழங்குகளையும் வாயினால் கௌவித் தின்ற அநாகரிகமான காலம் போய், கையினால் எடுத்து உண்ண வேண்டும்; பக்குவப்படுத்தி உண்ண வேண்டும் என்ற தெளிவு ஏற்பட்டது பண்பாட்டின் வளர்ச்சியைக் குறிக்கிறது.

இந்த உலகியல் வாழ்க்கை முறைகளைச் சிந்திப்பதுடன் மட்டும் நின்றுவிடாமல், இந்த உலகில் நமக்கு வாழ்க்கை ஏன் அமைந்தது? இந்த வாழ்க்கை இப்படி ஏன் அமைந்தது? இதற்கு ஏதாவது காரணம் உண்டா? என்றெல்லாம் சிந்தனை செய்தார்கள்.

நாம் எத்தனையோ வினைவுகளை அனுபவிக்கிறோம். இந்த விளைவுகளாகிய காரியங்களுக்கு அடிப்படையான காரணங்கள் உண்டு. ஏன் என்றால் மூல காரணம் இல்லாமல் எந்தக் காரியங்களும் உண்டாவதில்லை அல்லவா!

உலகத்தில் தோன்றியுள்ள மிகச் சிறந்த சிந்தனையாளர்களுக்கு இணையாக நம் நாட்டிலும் தலைசிறந்த சிந்தனையாளர்கள் தோன்றியுள்ளனர்.

மக்களுக்கும், மிருகங்கள், பறவைகள், சிறிய உயிர்கள் ஆகிய எல்லாவற்றிற்கும் அந்த அந்த உடம்பு ஏன் அமையவேண்டும்? அந்த அந்த உடம்புக்குள்ளே இருக்கக்கூடிய உயிர்களுக்கும், உடம்புக்கும் முன்தொடர்பு உண்டா? அப்படி இருந்தால் அந்தத் தொடர்பு ஏற்படக் காரணம் என்ன என்று நம் முன்னோர்கள் சிந்தித்தார்கள். அதன் விளைவாகச் சில முடிவுகளுக்கு வந்தார்கள். அந்த முடிவு முடிந்த முடிவு ஆகும். மாற்ற முடியாத முடிவாகும். நாகரிகத்தின் உச்சியிலும், பகுத்தறிவின் உச்சியிலும் விளைந்த முதிர்ந்த முடிவாகும். தங்களுடைய அனுபவத்தில் உணர்ந்த உணர்வுகளை அரிய நூல்களிலே அமைத்து நமக்கு வழங்கியிருக்கிறார்கள்.

இவ்வாறு அருமையானவற்றைச் சிந்தித்து மக்களுக்கு வழங்கினால்தான் உங்களை வாழவிடுவோம்; உணவு தருவோம் என்று அவர்களுக்கு யாராவது நிபந்தனை விதித்தார்களா? இல்லையே. அல்லது பரிசு தருவோம் என யாராவது ஆசையும், உற்சாகமும் ஊட்டினார்களா? இல்லை. எவ்விதப் பதில் உதவியும் எதிர்பாராமல், ஏன்— அதைப்பற்றிய சிந்தனையே இல்லாமல் உலகச் சமுதாயத்துக்கு அருட்கொடை வழங்கிய அருள் உள்ளம் கொண்ட பெருமக்கள் அவர்கள். பரிசுக்கும், புகழுக்கும் அடிமைப்படாத சிந்தனை அவர்களுடைய சிந்தனை. எனவே அவர்களுடைய

சிந்தனையில் தெளிவும், இலட்சிய நோக்கும் இருந்தன.

அவ்வாறு நாகரிகம் முதிர்ந்த ஒரு சமுதாய இலட்சியச் சிந்தனையில் தோன்றியவை சங்க இலக்கியங்கள். அந்நூல்களுள் காணப்படும் சிந்தனைகளுள் ஒன்று ஊழ்வினை.

**ஊழ்வினை**

நாம் அடிக்கடி ஊழ்வினை, ஊழ் என்று சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறோம். விதி, தலைவிதி எனவும் ஊழ்வினையைச் சொல்லுவார்கள். தலையெழுத்து என்று சொல்லுவதன் மூலமும் ஊழ்வினையைக் குறிப்பிடுவது உண்டு. வினை என்றும் குறிப்பிடுவார்கள். கன்மம் எனவும், கருமம் எனவும் கூறுவார்கள். கன்மம் என்றாலும் கருமம் என்றாலும் ஒன்றுதான். தமிழ் இலக்கியத்தில் ஊழ்வினையைப் பால் என்று சொல்லுகிறார்கள்.

**ஊழ்வினை என்றால் என்ன ?**

ஒருவன் செய்யக்கூடிய செயல்களின் பலன்களை அதே பிறவியிலும், அடுத்து வரக்கூடிய பிறவிகளிலுமாக அனுபவிப்பது ஊழ்வினை எனப்படும்.

ஒரு செயலின் நோக்கம், அந்தச் செயலின் பலன், அப்பலனை அனுபவித்தல் ஆகியவை கருமவினை என்று விளக்கப்படுகிறது.

எந்தச் செயலைச் செய்தாலும் அதற்கு ஒரு விளைவு ஏற்படும் அல்லவா! ஒருவன் ஒரு பிறவியில் சில கருமங்களைச் செய்கிறான். அதனால் ஏற்படக்கூடிய விளைவுகளை அந்தப் பிறவியில் அனுபவிக்கிறான். அப்படி அனுபவித்தவை போக எஞ்சியிருக்கக்கூடிய பலன்களையும் அவன் அனுபவித்தே ஆக வேண்டும். அதற்காக அடுத்த பிறவி எடுக்கிறான். அடுத்த பிறவி எடுத்து முன் பிறவிப் பாக்கியான கரும பலனை அனுபவிக்கும்போது, மேற்கொண்டும் சில கருமங்களைச் செய்கின்றான். அப்படிச் செய்யக்கூடிய கரும பலனை அனுபவிப்பதற்கு மேலும் பிறவி எடுக்க வேண்டியுள்ளது.

இப்படியே பிறவிதோறும் கருமங்களைச் செய்யச் செய்யச் சங்கிலித் தொடர் போல பிறவி நீண்டுகொண்டே போகிறது. இவ்வாறு ஊழ்வினையைப் பற்றிச் சொல்லுகிறார்கள்.

அப்படியானால் இதற்கு முடிவு இல்லையா? என்று கேட்கலாம். மனிதப் பிறவி எடுத்து விட்டால் தெரிந்தோ தெரியாமலோ தீய செயல்கள் செய்து விடுகிறோம். அவற்றிற்கெல்லாம் பலன் அனுபவித்துத்தான் ஆக வேண்டும் என்ற நிலை ஏற்படும்போது இதற்கு நிவர்த்தி இல்லையா என்று நம் மனம் கேட்கிறது. அப்படி நிவர்த்தி இல்லாமல் போனால் மதத்தின் மேலும், கடவுளின் பேரிலும் உள்ள நம்பிக்கை குறைவது போன்ற எண்ணம் உண்டாகிறது. சமயமோ கடவுளோ இதற்கு வழி காட்டுவது இல்லையா என்ற கேள்வியும் வருத்தமும் தோன்றுகின்றன.

நாம் செய்த பாவங்களை யெல்லாம் மனம் திறந்து இறைவனிடத்தில் சொன்னால் அவன் பாவ மன்னிப்புக் கொடுத்துவிடுவான்; எனவே கரும பலன் அந்தப் பிறவியோடு முடிந்து விடுகிறது. அந்த ஆத்மாவுக்கு மறு பிறவி கிடையாது என்று மறு பிறவியில் நம்பிக்கை இல்லாத மதங்கள் சொல்லுகின்றன.

தவறுகளைச் செய்து விட்டு மன்னிப்புக் கேட்பதில் நியாயம் இல்லை. செய்த தவறுகளுக்குத் தண்டனை அனுபவித்தே ஆகவேண்டும். நல்வினை செய்தால் இன்பமும், தீவினை செய்தால் துன்பமும் எத்தனை பிறவி எடுத்தாலும் அனுபவித்தே ஆகவேண்டும் என்று இந்துமதம் சொல்லுகிறது. அப்படிச் சொன்ன ஞானிகள் இதற்குப் பரிகாரமும் சில வழிகளில் சொல்லியிருக்கிறார்கள்.

“சார்பு உணர்ந்து சார்புகெட ஒழுகின் மற்று அழித்துச்
சார்தரா சார்தரும் நோய்.”

சார்ந்து இருக்க வேண்டிய இறைவனை உணர்ந்து, தன்னைச் சார்ந்து பற்றிக்கொண்டிருக்கும் உலகப் பற்றுக்கள் எல்லாம் அழியுமாறு வாழ்ந்தால், உயிர்களை வந்து பற்றக்கூடிய துன்பங்கள் ஒரு நாளும் உயிர்களைப் பற்றமாட்டா என்று சான்றோர் அதற்கு வழி சொல்லி இருக்கிறார்கள்.

“இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.”

இறைவனுடைய பெருமை மிக்க புகழ் வார்த்தைகளை இடைவிடாது சொல்லித் தியானிப்பவர்களிடத்து நல்வினை தீவினை ஆகிய இரண்டு வினைகளும் சேரமாட்டா எனச் சான்

ளுர் தமது அனுபவ மொழிகளையும் கூறியுள்ளனர்.

"செய்வினை வந்து உமைத் தீண்டப் பெறு திருநீலகண்டம்"— நீங்கள் செய்த வினைகள் நிச்சயம் உங்களை வந்து தீண்டமாட்டா. திருநீலகண்டத்தின்மீது ஆணை என்கிருர் அடியார் ஒருவர்.

" சித்தம் தெளிவீர்காள்
அத்தன் ஆரூரைப்
பத்தி மலர்தூவ
முத்தி ஆகுமே "

—சித்தம் தெளிவு அடைந்து திருவாரூர் இறைவனைப் பக்தியுடன் மலர்தூவிப் பணிந்து போற்றுங்கள்; முக்தி கிடைக்கும் என்கிருர் சம்பந்தர். சித்தம் தெளிவு அடைகிறபோது உலகப் பற்றுக்கள் தாமாகவே விலகிப்போகின்றன என்கிருர் ஞானசம்பந்தர்.

மலர் தூவித் தூபதீபம் காட்டிப் புறவழிபாட்டால் இறைவனை வழிபடுவது முதல்நிலை. "இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க" என இறைவனை மனத்திலேயே இருத்தி வழிபாடு செய்வது அகவழிபாடாகிய இரண்டாம் நிலை. ஜீவாத்மாவே பரமாத்மா ஆவது—அதாவது உயிரும் இறைவனும் ஒன்ருகவே ஆவது மூன்ரும்நிலை.

இவ்வாறு எவ்வகையாலுைம் சரி, இறைவன் அருள் வாய்க்கும்போது கருமவினைகளால் ஏற்படும் துன்பங்களோ, தொடர்ச்சியாக வருகின்ற பிறவித் துயரங்களோ இல்லை.

ஊழ்வினை என்ற சொல்லுக்கு விளக்கமாக "இருவினைப் பயன் செய்தவனையே சென்றடைதற்கு ஏதுவாகிய நியதி" என்று பரிமேலழகர் குறிப்பிடுகிருர்.

ஊழ், பால், முறை, உன்மை, தெய்வம், நியதி, விதி ஆகிய எல்லாச் சொற்களும் ஒரே பொருள் தரக்கூடிய சொற்களே எனவும் பரிமேலழகர் கூறுகிருர்.

ஊழ்வினையைப் பற்றியும் கருமங்களைப்பற்றியும் இதனுல் ஏற்படும் விளைவுகளைப்பற்றியும் சங்ககாலத்திற்குப் பின்னுல் வந்த தமிழ் நூல்கள் விளக்கமாகக் கூறுகின்றன.

சங்க நூல்களில் ஊழ்வினையைப்பற்றி அதிகமாகச் சொல்லவில்லை. ஆங்காங்கே சில இடங்களில் மட்டுமே சொல்லப்பட்டுள்ளது. காரணம், ஊழ்வினையை வற்புறுத்திச் சொல்லுவதற்காகவே சங்கநூல்கள் தோன்றவில்லை; சங்கப் பாடல்கள் பாடப்படவில்லை. புலவர்கள் அரசர்களுக்கும், மக்களுக்கும் அறவுரை சொல்லி வருகின்றபோது, ஊழ்வினையின் வலிமையை வற்புறுத்தவேண்டும் என்று எண்ணிய இடங்களில் மட்டும் ஆங்காங்கே சொல்லிச் சென்றிருக்கிருர்கள்.

பிற்காலத்திய மக்களுக்கு ஊழ்வினையில் மிகுந்த நம்பிக்கை இருந்தது போல் சங்ககால மக்களுக்கு ஊழ்வினையில் அவ்வளவாக நம்பிக்கை இல்லை. தலைவனும் தலைவியும் முதன் முதலாகச் சந்தித்துத் திருமணம் செய்துகொள்வதற்குப் பால் என்ற தெய்வம் (ஊழ்வினைதான்) காரணம் என்ற நம்பிக்கைமட்டும் இருந்தது.

"ஊழ்வினையின் உண்மையை முதலில் உணர்ந்தவர்கள் திராவிடரோ ஆரியரோ தெரியவில்லை" என ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.

இருப்பினும் சங்க நூல்களில் சில இடங்களில் "ஊழ்" பற்றிய சிந்தனைகள் வருகின்றன. வடமொழியில் கர்மம் என்பது தமிழில் ஊழ் எனச் சொல்லப்படுகிறது.

"வாழ்தல் வேண்டும் இவண் வரைந்த வைகல்
வாழச் செய்த நல்வினை அல்லது
ஆழும் காலைப் புணைபிறிது இல்லை"

— இந்த உலகத்தில் நாம் எவ்வளவு காலம் வாழவேண்டும் என்று வரையறை செய்யப்பட்டுள்ளதோ அவ்வளவு காலமும் நல்வினை செய்து வாழ்வதே நாம் செய்யத் தக்கது ஆகும். அவ்வாறு நாம் நன்முறையில் வாழ்வதற்கு நல்ல துணையாக அமையும் நல்வினையைத் தவிர, இறக்கும்போது உடலை விட்டுப் பிரிந்து செல்லும் உயிருக்கு வேறு துணை இல்லை எனப் புறநானூறு [367] கூறுகிறது.

வாழவேண்டிய காலம் வரையறுக்கப்பட்டுள்ளது எனவும், அப்படி வாழும்போது நல்ல வினைகளே செய்யவேண்டும் எனவும், அப்படிச் செய்யும் வினைகளே இறந்த பிறகு உயிருக்கு உறுதுணை ஆகும் எனவும் கூறுவதிலிருந்து சங்ககால மக்கள் ஊழ்வினையின்மீது கொண்டிருந்த நம்பிக்கையை அறியலாம்.

"தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலும் தணிதலும் அவற்ருேர் அன்ன
வானம் தண்துளி தலைஇ ஆனுது

கல்பொருது இரங்கும் மல்லல் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம்"

— தீமையும் நன்மையும் பிறர் தருவதால் நமக்கு வருவது இல்லை. துன்பத்தில் வருந்துவதும் இன்பத்தால் மகிழ்ச்சி அடைவதும் நம் கையில் இல்லை. வானத்தில் இருந்து மழை பெய்வதால் மலையிலே மழைபெய்து அருவியாகப் பெருக்கெடுத்து ஆறாக ஓடிவருகிறது. அவ்வாறு ஓடிவரும் வெள்ளத்தில் மிதந்து வருகின்ற தெப்பம் தண்ணீரின் போக்குப்படியே மிதந்து செல்லும். அதுபோல நம் உடலில் உள்ள உயிரும் ஊழ்வினைப்படியே இயங்கும். தீமை வருவது, நன்மை வருவது, இன்பதுன்பங்களை அனுபவிப்பது, ஏழையாவது,பணக்காரர் ஆவது ஆக எல்லாமே ஊழ்வினை வலிமையால்தான் நடைபெறுகின்றன எனவும் புறநானூறு என்னும் சங்கநூல் [192] கூறுகிறது.

"உயர்ந்த வேட்டத்து உயர்ந்திசினோர்க்குச்
செய்வினை மருங்கின் எய்தல் உண்டெனில்
தொய்யா உலகத்து நுகர்ச்சியும் கூடும்
தொய்யா உலகத்து நுகர்ச்சி இல்லெனின்
மாறிப் பிறப்பின் இன்மையும் கூடும்"

— மிகச் சிறந்த, உயர்ந்த எண்ணங்களை உடைய சான்றோர்கள், அவர்கள் செய்த நல்வினை காரணமாக இன்பம் அனுபவிக்கும் வாய்ப்பினைக் கிடைக்கப் பெற்றால், நல்வினை தீவினை இரண்டும் இல்லாத தேவலோகத்தில் இன்பம் நுகருவார்கள். அவ்வாறு அவர்களுக்குத் தேவலோகத்தில் இன்பம் அனுபவிக்கும் நிலை இல்லாது போனால், திரும்பவும் பூமியில் வந்து பிறக்கும்படியான மறுபிறப்புக் கிடையாது எனவும் புறநானூறு [214] கூறுகிறது.

தேவலோகத்தில் இன்பம் அனுபவிப்பதற்கும், மறுபிறவி இல்லாமல் போவதற்கும் ஊழ்வினையே காரணம் என்னும் நம்பிக்கை இருந்தது என்பது புலனாகிறது.

"ஆர் அமர் உழக்கிய மறம்கிளர் முன்பின்
நீள்இலை எஃகம் மறுத்த உடம்பொடு
வாரா உலகம் புகுதல் ஒன்றுஎன"

— வீரத்தோடு போர்க்களத்தில் போர் செய்யும்போது வேலால் புண்பட்ட உடம்போடு மீண்டும் பிறவி எடுப்பதற்கு இல்லாத உலகமாகிய மேல் உலகம் செல்லுவார்கள் என்று வீரர்களைச் சிறப்பித்துச் சொல்லுகிறது புறநானூறு. [341]

எனவே மறுபிறப்பில் நம்பிக்கை இருந்தது எனவும், மறுபிறப்பிற்கு ஊழ்வினையே காரணம் என நினைத்தார்கள் எனவும் தெரிகிறது.

"ஆற்று எதிர்ப்படுதலும் நோற்றதன் பயனே" —"பொருநனே! உன்னை நான் வழியிலே சந்திக்கும்படி செய்தது உன்னுடைய ஊழ்வினையே" என்று சங்க நூல்களுள் ஒன்றாகிய பொருநர் ஆற்றுப்படை கூறுகிறது.

இதிலும், ஊழ்வினைமேல் நம்பிக்கை கொண்டிருந்த செய்தி தெரிய வருகிறது.

"மறந்தமை கல்லாப் பழனும் ஊழ் இறந்து
பெரும்பயம் கழியினும் மாந்தர் துன்னார்"

— எவ்வளவு நன்மை வந்தாலும் சரி ஊழ்வினையை மறப்பதை மனத்தாலும் நினைக்காத மக்கள் என்று மலைபடுகடாம் என்ற சங்க நூல் இயம்புகிறது.

ஊழ்வினை மிகவும் வலிமை உடையது என்ற நம்பிக்கை அக்கால மக்களிடம் இருந்து வந்தது தெரிய வருகிறது.

"ஏனைஉலகத்து இயைவதாள் நமக்கென
மான்அமர் நோக்கம் கலங்கிக் கையற்று"

—தன்னுடைய தலைவனுடன் மறு உலகத்தில் இணையக்கூடிய வாய்ப்பு தனக்கு உண்டு எனத் தலைவி ஒருத்தி எண்ணுகிறாள் எனக் குறிஞ்சிப்பாட்டு என்னும் சங்கநூல் கூறுகிறது.

எனவே சங்ககால மக்கள் ஊழ்வினையில் எவ்வளவு தூரம் நம்பிக்கை கொண்டிருந்தார்கள் என்ற செய்தி இந்தச் சான்றுகளால் நமக்குத் தெரியவருகிறது.

சங்ககாலத்தை அடுத்து வந்த திருவள்ளுவர் ஊழ்வினையைப் பற்றி என்ன கூறுகிறார் என்பதை இவ்விடத்தில் நினைத்துப் பார்ப்பது பொருத்தமாகும்.

"ஊழில் பெருவலி யாஉள மற்றொன்று
சூழினும் தான் முந்துறும்"

—வேறு ஏதோ ஒரு நல்வினையால் நல்ல காரியம் நமக்கு நடக்கப் போகிற சமயம் பார்த்து இந்தத் தீய ஊழ்வினை வந்து குறுக்கிட்டு வரக்கூடிய நன்மையைக் கெடுத்துவிடும். எனவே, ஊழ்வினையைக் காட்டிலும் வலிமை படைத்

தது எதுதான் இருக்கிறது? ஒன்றுமே இல்லை என்கிறார்.

இதிலிருந்து அவர் ஊழ்வினைமீது மிகவும் நம்பிக்கை கொண்டிருந்தார் என்பது தெரிகிறது. உண்மைதான். திருவள்ளுவரும் ஊழ்வினை என்ற விதியின் மீது நம்பிக்கைகொண்டிருந்தார்.

ஆனால், அந்த ஊழ்வினையைச் சொல்லி, தலையெழுத்து என்று சொல்லி, தலையில் எழுதிய படிதான் எல்லாம் நடக்கும், நம்மால் ஒன்றும் ஆகாது என்று சொல்லி வீண்பொழுது போக்குவதை வள்ளுவர் விரும்பவில்லை.

ஊழ்வினையை வென்று நல்ல வாழ்க்கை வாழ முடியாமல் போய் விடுமோ என்று மனித உள்ளம் சோர்ந்து விடக்கூடாது எனவும் கருதினார். அதற்காக உற்சாகமாகக் குரல் கொடுத்தார்.

" ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர் "

—கொஞ்சம் கூடச் சோர்வு இல்லாமல், இடைவிடாமல் முயற்சி செய்யக் கூடியவர்கள், எவ்வளவு தீய ஊழ்வினையையும் புறமுதுகு காட்டி ஓடி விடும்படிச் செய்து விடுவார்கள் என்று கூறுகிறார்.

கடின உழைப்புக்கு ஈடு இணை எதுவும் இல்லைதான். கடினமாக உழைத்தால் தலைவிதி ஒன்றும் செய்து விடாது என்பது வள்ளுவர் கருத்து.

அத்துடன் விட்டு விடவில்லை வள்ளுவர்.

" குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான் முந்துறும் "

— என்னுடைய குடும்பத்தை இன்னும் மேல் நிலைக்குக் கொண்டுவந்தே தீருவேன் என்று மனத்திலே எண்ணிக்கொண்டு இடைவிடாமல் முயற்சி செய்கின்றவனுக்குக் கெடுதல் செய்யக் கூடிய ஊழ்வினை கூட, வேட்டியை வரிந்து கட்டிக்கொண்டு வந்து கைகட்டிச் சேவகம் செய்யும் என்கிறார் வள்ளுவர்.

ஊழ்வினையையும் நாம் சொல்லுகிறபடி கேட்கச் செய்யலாம் என்பது வள்ளுவர் கருத்து.

ஆனால், காலப் போக்கில் ஊழ்வினைமீது மக்கள் கொண்டிருந்த நம்பிக்கை ஒரு விதத்தில் வளர்ந்து விட்டது என்றே கூறலாம். பிற்கால அடியார்களின் பாடல்களில் இக்கருத்து மிகுதியாகச் சொல்லப்படுகிறது. " விதியின் பிழை " எனக் கம்பனைச் சொல்ல வைத்ததும் விதியின் வலிமைதான்.

தமிழ் நாட்டுப் பண்பாட்டு வரலாற்றில் (Cultural History) ஊழ்வினை ஓர் அத்தியாயமாகத் திகழ்கிறது.

---

# செய்திகள்

**நிகழ்பவை**

20—5—79 ஞாயிற்றுக்கிழமையன்று இரவு 7-00 மணி முதல் 8-30 மணி வரை திருநெல்வேலி ஜில்லா அம்பாசமுத்திரம் அகஸ்தீஸ்வரர் கோவிலில் **ஸ்ரீமத் ஆத்மானந்த சுவாமிகள்** 'திருவிளையாடல் புராணம்' பற்றிச் சொற்பொழிவு நிகழ்த்துவார்கள்.

22—5—79 செவ்வாய்க்கிழமையன்று ஆந்திராவிலுள்ள சித்தூரில் **ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள்** காலை 9-00 மணியிலிருந்து பகல் 12-00 மணி வரை அந்தர்யோகம் நடாத்துவார்கள்.

மே மாதம் 30 ஆம் தேதி புதன்கிழமையன்று ஸ்ரீ விவேகானந்த வித்யாவன குருகுலத்துக்குத் தேவையான புதிய மாணவர்கள் 4, 5, 6, 7 வகுப்புக்களுக்குப் பரீட்சை செய்து தேர்ந்தெடுக்கப்படுவார்கள். புதிதாகச் சேரும் மாணவர்கள் அன்று காலை 9-00 மணிக்குள் குருகுலத்துக்கு வந்து பரீட்சை எழுதத் தயாராக இருக்கவேண்டும்.

வடஆற்காடு ஜில்லா ஆரணி கொசப்பாளையம் ஸ்ரீ பழனி ஆண்டவர் கோயிலில் 9—6—79 சனிக்கிழமையன்று மாலை 6-30 மணியளவில் **ஸ்ரீமத் சுவாமி சதானந்தர் அவர்கள்** தலைமையில் சமயத் தத்துவக் கருத்தரங்கு நடைபெறும்.

வடஆற்காடு ஜில்லா வேலூர் அருள் நெறிச் சங்கத்தின் சார்பில் மாவட்ட ஜனதா கட்சித் திடலில் 10—6—79 ஞாயிற்றுக்கிழமையன்று மாலை 6-30 மணியளவில் நடைபெறும் சுவாமி விவேகானந்த ஜயந்தி விழாவில் **சுவாமி சதானந்தர் அவர்கள்** சொற்பொழிவாற்றுவார்கள்.

---

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

## இயற்றிய நூல்கள்

| | |
|---|---|
| திருவாசகம் - பிரசார விலை | ரூ. 14-00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை - பிரசார விலை | ... 12-00 |
| ஞானயோக விளக்கம் | ... 8-00 |
| ராஜயோக விளக்கம் | ... 8-00 |
| கர்மயோக விளக்கம் | ... 7-00 |
| பக்தியோக விளக்கம் | ... 6-00 |
| பரமஹம்சரின் பெருமை | ... 6-00 |
| விவேகானந்த விவரணம் | ... 4-00 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | ... 4-00 |
| விவேகானந்த உபநிஷதம் | ... 4-00 |
| கடவுளின் வடிவங்கள் | ... 4-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்-I | ... 3-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம்-II | ... 3-50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரீ ஏழாம் பதிப்பு-பிரசார விலை | ... 3-00 |
| அனுஷ்டான வேதாந்தம் | ... 3-00 |
| எதிர்கால இந்தியா | ... 3-00 |
| தினசரி தியானம் - பிரசார விலை | ... 2-75 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் சரிதம் | ... 2-00 |
| தேவரகசியம் (முதலிய கதைகள்) | ... 2-00 |
| ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம் | ... 2-00 |
| கண்ணன் என்னும் கடவுள் | ... 2-00 |
| தாயுமானவர் இயற்றிய | |
| பரிபூரணானந்தம் விரிவுரை | ... 3-00 |
| சின்மயானந்த குரு ஷை | ... 3-00 |
| ஆனந்தமானபரம் ஷை | ... 3-00 |
| சுகவாரி ஷை | ... 3-00 |
| மௌனகுரு வணக்கம் ஷை | ... 3-00 |
| எங்கும்நிறைகின்றபொருள் ஷை | ... 2-50 |
| பரசிவ வணக்கம் ஷை | ... 1-00 |
| விரதவீரர் பீஷ்மர் (நாடகம்) | ... 1-50 |
| பஜனைப் பாடல்கள் | ... 1-50 |
| சந்நியாசி | ... 1-25 |
| குழந்தைகளின் களிக்கூடம் | ... 1-00 |
| இராவண தத்துவம் | ... 1-00 |
| சகோதரி நிவேதிதை | ... 1-00 |
| காயத்ரி | ... 1-00 |
| வாலிமோக்ஷம் (நாடகம்) | ... 1-00 |
| தவப்புதல்வர்கள் (நாடகம்) | ... 1-00 |
| ஏகலைவ்யனின் குருபக்தி (நாடகம்) | ... 1-00 |
| தானவீரன் கர்ணன் | ... 1-00 |
| பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி கர்வபங்கம் | ... 1-00 |
| நோய்க்கு இடம் கொடேல் | ... 0-80 |
| நன்மக்களைப் பெறுதல் | ... 0-80 |

| | |
|---|---|
| பாண்டவ கௌரவ பெருமை (நாடகம்) | ரூ. 0-80 |
| ஆத்ம சக்தி | ... 0-75 |
| பாதுகா பட்டாபிஷேகம் (நாடகம்) | ... 0-75 |
| இறைவணக்கம் | ... 0-75 |
| செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? | ... 0-75 |
| *மனிதனது நிஜசொரூபம் | ... 0-70 |
| *சக்தி தத்துவம் | ... 0-70 |
| *சிவ தத்துவம் | ... 0-70 |
| பிரஹ்லாதன் (நாடகம்) | ... 0-65 |
| *ஈசன் எங்கும் நிறைந்துள்ளான் | ... 0-60 |
| இந்து மதமும் கிறிஸ்துவ மதமும் | ... 0-60 |
| *ஆலய வழிபாடு | ... 0-60 |
| *சூரிய நாராயணன் | ... 0-50 |
| *முருகக் கடவுள் | ... 0-50 |
| *விஷ்ணு தத்துவம் | ... 0-50 |
| தெய்விக மகிமைகள் | ... 0-50 |
| சைவன் யார்? | ... 0-50 |
| கர்மகாண்டம் எது? ஞானகாண்டம் எது | ... 0-50 |
| மார்க்கண்டேயன் (நாடகம்) | ... 0-40 |
| தபோபலன் (நாடகம்) | ... 0-40 |
| *கணபதி | ... 0-40 |
| வர்ணாச்ரம தர்மம் | ... 0-30 |
| அருள்விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் | ... 0-30 |
| The Bhagavad Gita (9th Imp.) | ... 15-00 |
| The Indian National Education | ... 8-00 |
| Sri Lalithambika Sahasranama Stotram | ... 6-00 |
| Ramakrishna Lives Vedanta | ... 6-00 |
| Facets of Brahman or The Hindu Gods | ... 5-00 |
| Daily Divine Digest (DELUXE) | ... 4-50 |
| Daily Divine Digest (Ordinary) | ... 2-50 |
| Mahabharata (with plastic cover) | ... 4-50 |
| Ramayana (do) | ... 4-00 |
| The Man Making Message of Vivekananda (with plastic cover) | ... 4-00 |
| Sri Vishnu Sahasranama Stotram | ... 4-00 |
| Siva Sahasranama Stotram | ... 3-50 |
| The Bhagavad Gita (Small Size) | ... 3-00 |
| Holy Bible—In the Light of Vedanta | ... 1-50 |
| *Introducing the Gita | ... 1-50 |
| TAT TVAM ASI (*That Thou Art*) IN Tayumana Swami | ... 1-00 |
| *Key to Higher Life | ... 0-75 |
| *The Teacher | ... 0-60 |
| *The Student | ... 0-45 |

தேவையான புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபால் கட்டணத்திற்காக ஸ்ரீமத் பகவத்கீதைக்கு ரூ. 3-25ம் தினசரி தியானத்திற்கு ரூ. 2-40ம் மற்ற வெளியீடுகளுக்கு ரூ. 2-50 முதல் 3-50 வரை சேர்த்து அனுப்புங்கள். *இக்குறியிட்ட புத்தகங்கள் ஏனைய பெரிய புத்தகங்களில் அடங்கியுள்ளன.

## விவேகானந்த கல்லூரி

திருவேடகம் மேற்கு, சோழவந்தான் R. S. மதுரை ஜில்லா. Pin-624 217.

இக்கல்லூரி குருகுல முறையில் எட்டு ஆண்டுகளாக நடைபெற்று வருகிறது. வாழ்க்கைப் பயிற்சி இதனுடைய சிறப்பு அம்சமாகும். இங்கு கீழ்க்கண்ட வகுப்புகள் நடைபெறுகின்றன.

**THREE YEAR DEGREE COURSES ( SEMESTER SYSTEM )**

(a) B.A., B.Sc., Part I Tamil / Sanskrit Part II Tamil,

Part III 1. B.A. Main : Economics, Ancillary : Elements of Economic Statistics, History of India II.

2. B.Sc. Main : Physics, Ancillary : Mathematics & Chemistry.

3. B.Sc. Main : Zoology, Ancillary : Chemistry & Botany.

(b) B.Com : Optional subjects : 1) Costing 2) Incom Tax Law and Practice.

கீழ்க்கண்ட வகுப்புக்கள் பல்கலைக்கழக அனுமதியின் பேரில் 1979-80ஆம் ஆண்டிலிருந்து துவக்கப்படவிருக்கின்றன.

**I THREE YEAR DEGREE COURSES (SEMESTER SYSTEM)**

1. B.A. English Literature.
2. B.A. Main : History.
   Ancillary : General Economics & Modern Government.
3. B.Sc. Main : Mathematics.
   Ancillary : Applied Mathematics & Physics.
4. B.Sc. Applied Zoology. Ancillary : Chemistry & Botany.

**II TWO YEAR POST GRADUATE COURSES ( SEMESTER )**

1. M.A. Applied Philosophy. 2. M.A. Sanskrit.

சமஸ்கிருதம் ஆரம்ப எழுதுக்களிலிருந்து மாணவர்கட்கு கற்பிக்கப்படும். விண்ணப்பப் படிவமும் விவரணமும் பெற விரும்புவோர் முதல்வருக்கு ரூ. 3-50 மணியார்டர் செய்து அல்லது ரூ. 3-00 நேரில் செலுத்திப் பெற்றுக்கொள்ளலாம். எந்த வகுப்பிற்கான விண்ணப்பம் என்பதைக் குறிப்பிடவேண்டும்.

K. சுப்ரமண்யம்
முதல்வர்

சுவாமி சித்பவானந்தர்
தலைவர்

---

## குருகுலப் பள்ளியில் மாணவர்களைச் சேர்க்க விவரம்

திருப்பராய்த்துறை ஸ்ரீ விவேகானந்த வித்யாவன குருகுல உயர்நிலைப்பள்ளியில் IV, V, VI, VII ஸ்டாண்டர்டுகளில் சேர்த்துக்கொள்ள புதிய மாணவர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். போதனு மொழி தமிழ். உணவு, உடை, வாடகை, முட்டுவழி மற்றும் எல்லாச் செலவுகளுமாக வகுப்புக்கு ஏற்ப மாதம் ரூ. 140 முதல் ரூ. 160 வரை ஆகும்.

குருகுலத்தில் மாணவரைச் சேர்க்க விரும்புவோர் மே மாதம் 30ஆம் தேதி காலையில் 9மணிக்குள் பையன்களுடன் இங்கு வரவேண்டும். விரிவான விவரம் வேண்டுவோர் காரியதரிசி, ஸ்ரீ விவேகானந்த வித்யாவன குருகுலம், திருப்பராய்த்துறை-639 115, திருச்சி ஜில்லா என்ற முகவரிக்கு ஐம்பது பைசா ஸ்டாம்பு அனுப்பி 'வித்யாவனச் சட்ட திட்டங்கள்' என்ற சிறு புத்தகத்தைப் பெற்றுப் பார்த்துக் கொள்ளலாம்.

Edited by SWAMI NITHYANANDA,
Printed & Published by Swami Sankarananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt